

ஸ்ரீ. திருவண்ணாமலை தேவாலயம்.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.




| தொகுதி | விபவ௵ கார்த்திகை௴ ௧௳ | பகுதி |
| --- | --- | --- |
| 14 | 1928௵ நவம்பர்௴ 16௳ | 5 |


## கடவுள் வணக்கம்.

மின்னனைய பொய்யுடலை நிலையென்று மையிலகு
விழிகொண்டு மயல் பூட்டு
மின்னார்க ளின்பமே மெய்யென்றும் வளர்மாட
மேல்வீடு சொர்க்க மென்றும்
பொன்னையழி யாதுவளர் பொருளென்று போற்றியிப்
பொய்வேட மிகுதி காட்டிப்
பொறையறிவு துறவீத லாதிநற் குணமெலாம்
போக்கிலே போக விட்டுத்
தன்னிகரி லோபாதி பாழ்ம்பேய் பிடித்திடத்
தரணிமிசை லோகா யதன்
சமயநடை சாராமல் வேதாந்த சித்தாந்த
சமரச சிவாநு பூதி
மன்னவொரு சொற்கொண் டெனைத்தடுத் தாண்டன்பின்
வாழ்வித்த ஞான குருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌன குருவே. (1)

---

முருந்தின நகையார் டார முலைமுகந் தழுவிச் செவ்வாய்
விருந்தமிர் தென வருந்தி வெறியாட்டுக் காளாய் நாளும்
இருந்தலோ காயதப்பே ரினத்தனா யிருந்த வேழை
பொருந்தவுங் கதிமே லுண்டோ பூரணா னந்த வாழ்வே. (2)

---

கற்குணத்தைப் போன்றவஞ்சக் காரர்கள்கை கோவாம
னற்குணத்தார் கைகோத்து நான்றிரிவ தெந்நாளோ. (3)

---

# அரும்பொருள் விளக்கம்.

1. இதனால் அடிகள் தம்மிடமிருந்த நாஸ்திகத் தன்மையைப் போக்கிச் சமரச சிவாநுபூதி தந்து, அன்பினால் சிவபிரான் தம்மை ஆட்கொண்டருளினமையைப் பாராட்டிக் கூறுகின்றார்.

(இ-ள்.) தோன்றி மறையுந் தன்மையுள்ள மின்னலைபொத்ததும் நிலையற்றதுமான தேகத்தைச் சாசுவதமானதென்றும், அஞ்சனந்தீட்டிய கண்களால் காமக்களியூட்டும் பெண்களின் சிற்றின்பமே உண்மையான இன்பமென்றும், உயர்ந்த மாளிகைகளின் உப்பரிக்கைகளை சுவர்க்கலோகமென்றும், தங்கம் முதலிய பொருள்களை அழியாத நல்ல பொருள்களென்றும் விரும்பிக் காப்பாற்றி இடம்ப வேடங்களை உலகத்தார் பெரிதாக மதிக்க வெளிப்படுத்தி, மக்கட் பிறவி பெற்றோர்க்கு இன்றியமையாத பொறுமை, ஞானம், பற்றறுத்தல், ஈகை முதலிய நற்குணங்களுள் ஒன்றையும் பெறாமல் அவை செல்லும் வழியிலே செல்ல விட்டுவிட்டு, வேறு எதையும் உவமை காட்டமுடியாத உலோபகுணமாகிய பாழும் பைசாசம்பற்றியாட்ட இந்த உலகத்தில் லோகாயதனுடைய நாஸ்திககொள்கையைப் பொருந்தாமல் வேதாந்த சித்தாந்த சமரச சிவாநுபூதியைப் பொருந்துமாறு ஒப்புயர்வற்ற ஒரு கனிமொழியால் என்னைத் தடுத்தாட்கொண்டு அன்பினால் வாழச்செய்தருளிய ஞானாசாரியனே! மந்த்ராசாரியனே! யோகதந்த்ராசாரியனே! திருமூலரது பரம்பரையில் வந்தருளின மௌனகுருவே என்பதாம்.

இந்தச் சரீரம் தோன்றிக் கணநேரத்தில் அழிந்துவிடக்கூடுமென்பார் "மின்னனைய பொய்யுடல்" என்றார். ஐம்புல நுகர்ச்சியும் மாதரிடங் காண்பதாக உலகாயதர் மயங்கலின் "மையிலகு................மின்னார்க ளின்பமே மெய்யென்றும்" என்றார். அம்மாதர்கள் வசிக்கின்ற வீடுகளின் மேல் முற்றத்தைச் சுவர்க்கத்திற்குச் சமம் என்று மதிப்பராகலின் "மாட மேல்வீடு சொர்க்கமென்றும்" என்றனர். "பொய்வேட மிகுதிகாட்டி"—என்றது உலகத்தார் பெரிதும் மதிக்குமாறு ஆடையாபரண அலங்கிருதனாய்த் தன்னைக் காட்டிக்கொண்டு என்றபடி. லோபாதி குணங்களுள்ளவர் சற்கருமங்களைச் செய்ய மனம் வாராமல் தடுமாற்றமடைந்து அலைந்திடுவாராதலின் "லோபாதி பாழும் பேய்பிடித்திட" என்றார். லோகாயதன்—கண்டதே காட்சிகொண்டதே கோலமாக வாழ்பவன். மந்த்ரகுரு—மந்திரோபதேசம் செய்த ஆசாரியர். யோகதந்த்ரகுரு—யோகசாஸ்திர நுட்பங்களை யுணர்த்தியருளிய ஆசாரியர். தந்த்ரம் — சாஸ்திரம். மூலன் மரபு — திருமூலரை ஆதியாகக்கொண்ட பரம்பரை.

2. இதனால் சிற்றின்பத்தில் மூழ்கி உலகாயத வருக்கத்தைச் சேர்ந்த தமக்கும் நற்கதி சித்திக்குமோ என ஏங்கி வினவுகின்றார்.

மூருந்து—மயிலிறகின் அடிப்பாகம். நகை—இங்கே பற்களை யுணர்த்திற்று. வெறியாட்டு — காமக்களியாட்டம். ஏழை — அறிவிலி. கதி—பேரின்பவீடு.

---




## பொது ஜன ஊழியம்.

தமக்கென வாழாமல் மற்றவர்களுக்காக ஊழியஞ் செய்யும் சுயநலமற்ற மக்கள் எல்லாத் தேசங்களிலும் எக்காலத்திலும் பெரிதும் மதிக்கப்படுகிறார்கள். தான் மாத்திரம் வாழவேண்டும் என்று பிறர் நலம் பேணாது வாழ்பவன் என்றைக்கேனும் வீழ்ச்சியுற்றே தீருவான். இவன் பிறரை அடிமைப்படுத்தவே முயல்வான்; செல்வாக் கிருக்கும்வரை வாழ்க்கை ஒருவாறு நடக்கும். இவன் மற்றவருடைய அநுதாபத்தையும் அன்பையும் பெறாமையால் நாளாவட்டத்தில் பல தொல்லைகட் குட்படுவான். மனிதசமூகம் பரஸ்பர ஒத்துழைப்பினாலேயே வாழவேண்டியிருக்கிறது. நமது சாஸ்திரங்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப்பொருள்களை மக்கட்கு விதித்திருக்கின்றன. அவற்றுள் முதலிலிருப்பது அறம். அறம் என்பது விதி விலக்குகளை உணர்த்துமாயினும் உலகவழக்கிற் பெரும்பாலும் ஈகைப் பொருளிலேயே வருகின்றது. சமூகம் அல்லது தேசம் முன்னேற்றமடைந்து யாருக்கும் எந்தக் குறைவும் இருக்கக்கூடாது என்பதற்காகவே ஈகை பிரதானமாக வற்புறுத்தப்படுகிறது. "தேசத்தோடொத்துவாழ்" என்ற அமுதமொழி எத்தகைய விரிவான நோக்கத்தோடு உபதேசிக்கப்பட்டிருக்கிறது என்பதைச் சிந்தியுங்கள்? இக்காலத்தில் தன்னலமற்ற பொதுஜன ஊழியர் நமது நாட்டிற்கு மிகத் தேவை. இது கீழ்நாட்டு நாகரிகம் மழுங்கி மேனாட்டு நாகரிகவெள்ளம் உரமாகப் பாயும் சமயம். நமது சாஸ்திரநுட்பங்களும் ஒழுக்கங்களும் விளக்குவாரின்மையால் மங்கிக் கிடக்கின்றன. இவற்றைப் பொதுஜனங்கட்கு விளக்கக் கடமைப்பட்டவர்களான மடாதிபதிகளும் பிறரும் வாளா உறங்குகின்ற

னர். மடங்களுக்கு மானியமாக விடப்பட்ட பொருள்கள் பொது ஜனங்களுக்குச் சொந்தம். இவை கல்வி வளர்ச்சிக்கும் அறிவு வளர்ச்சிக்கும் சமய வளர்ச்சிக்கும் பயன்படுமாறு விடப்பட்டன. ஆனால் அப்பொதுப் பொருள்கள் கோர்ட்டுகளுக்கும் களியாட்டங்களுக்கும் உபயோகப்படுத்தப்படுகின்றன. மேனாட்டு கிறிஸ்தவ பாதிரிகளைப் பாருங்கள். உலகத்தில் அவர்கள் இல்லாத இடமேயில்லை. உடல், பொருள், ஆவி ஆகிய மூன்றையும் மற்றவர்களுக்கே அர்ப்பணம் செய்துவிடுகின்றனர். இந்தியாவில் அவர்களுடைய வேலை, எத்தகைய பலன் கொடுத்திருக்கிறது என்பது தெரிந்தும் நம்மனோர்க்கு இன்னும் அறிவு ஏற்படவில்லை. எத்தனை பள்ளிக்கூடங்கள்! எத்தனை வைத்தியசாலைகள்!! ஏழைகளின் அறிவு வளர்ச்சிக்கு எவ்வளவு பொருள் தருமம்!!! எங்கேயோ பிறந்து வளர்ந்து வந்தவர்கள் இங்கேவந்து இவ்வளவு வேலை செய்கிறார்கள். ஆண்டுதோறும் பல்லாயிரக் கணக்கானவர்களைத் தங்கள் மதத்தில் சேர்த்துக்கொண்டு வருகிறார்கள். நமது சைவ வைணவ மடாதிபதிகளுக்கு இவ்வுணர்ச்சி ஒரு சிறிதாவதுண்டா? "இது கலிகாலம். உலகம் இப்படித்தானிருக்கும். நாம் என்ன செய்யலாம். இக்காலத்தில் ஒன்றுஞ் செய்ய முடியாதென்று சாஸ்திரங்களே சொல்லுகின்றன" என்று சொல்லிக் காலங்கழிக்கிறார்கள். தங்கள் கடமையாகிய தொண்டு அல்லது ஊழியத்தை ஒரு சிறிதும் லட்சியம் செய்கின்றார்களில்லை. தன்னலங் கருதா ஊழியம் எங்கும் பரவினால் உலகில் கொடுமையேது? நடுக்கமேது? கவலையேது? நாம் பிறர்க்கு ஊழியஞ் செய்யவே படைக்கப்பட்டோம் என்று ஒவ்வொருவரும் நினைத்துத் தங்கடனாற்றினால் உலகந் தெய்வலோகமாய்விடாதா? எனக் கேட்கின்றோம்.

முற்காலத்தில் தோன்றிய நமது சமயப் பெரியார் பலரும் இந்த ஊழியத்தையே அறிவுறுத்திச் சென்றனர். எந்த மதத்தை எடுத்து ஆய்ந்தாலும் அதன்கண் தன்னலமறுப்பும் பிறநலச் சேவையும் பேசப்படுதல் காணலாம். மதங்கள் வேறு வேறாக இருந்தாலும் அவைகளின் மத்தியில் ஊழியம் என்னும் ஒரு பெருஞ் சமரசம் பிரகாசித்துக்கொண்டிருக்கிறது. இந்த ஊழியத்தை மனிதன் மறந்தநாள் முதல்கொண்டுதான் இந்தியா துக்கத்திற்குட்படலாயிற்று. நம் முன்னோர்கள் மனித சமூகவளர்ச்சிக்கும் அமைதிக்கும் ஊழியத்தைத் தமக்குரிய மதமாகக்கொண்ட

னர். வருணாசிரம தரும்ப்பாகுபாடு ஊழியங்கருதி அமைக்கப்பட்டது என்று சிலர் வாதிக்கிறார்கள். ஆனால் அது விவகாரத்திற்குரிய விஷயமாகையால் அதைப்பற்றி இங்கே ஆராய இடமில்லை. ஒருவருக்கொருவர் ஊழியராகும் தெய்வீகமதம் தொலைந்து ஒருவருக்கொருவர் தலைவராகவேண்டுமென்னும் ஜடத்தன்மை வாய்ந்த மதம் வளர்ந்து வருகின்றது. ஊழியத்தை மறக்கவும் தலைமையை நினைக்கவும் தூண்டும் நிலைமை எங்கணும் பரவிவருகிறது. இந்த மதத்திற்குப் பொருள்தான் பிரதானமானது. இந்தக் காலத்தில் பொதுஜன ஊழியம் என்றால் அது ஒரு பொருள் சம்பாதிக்கும் சூழ்ச்சி என்ற எண்ணம் எல்லாருடைய உள்ளத்திலும் பதிந்திருக்கிறது. இந்த எண்ணத்திற்குக் காரணங்களும் இல்லாமலில்லை. பொதுஜன சேவையின் பேரால் வசூலிக்கப்பட்ட அளவில்லாத திரவியம் வீண்விரயம் செய்யப்பட்டிருக்கிறது. விளம்பரப்படுத்தப்பட்ட பொதுநலப்பலன் காரியத்தில் ஒன்றுமில்லை.

பொதுஜன ஊழியத்திற்கு தியாகம் இன்றியமையாதது. தியாகபுத்தியில்லாவிட்டால் பொதுஜன ஊழியம் சூழ்ச்சியாகவே கருதப்படும். பொதுஜன ஊழியர்கள் தங்கள் உண்மை ஊழியத்தால் ஜனங்களின் நம்பிக்கையைச் சம்பாதிக்கவேண்டும். இராஜீய சம்பந்தமான பொதுஜன ஊழியமே சிலருக்கு உற்சாகத்தை அளிக்கிறது. சாதாரண பொது ஜனங்களின் கல்வி வளர்ச்சி அறிவு வளர்ச்சிகளுக்கான ஊழியத்தில் யாரும் அவ்வளவாக சிரத்தை காட்டுவதில்லை. நமது நாட்டு நிலைமையைப் பார்க்குமிடத்து இது மிகவும் வருந்தத்தக்க விஷயமாகும். சமூகமுன்னேற்றம் தேசமுன்னேற்றத்திற்கான எல்லாத் துறைகளிலும் ஊழியம் புரியவேண்டும். உண்டிக்கும் உடைக்கும் திண்டாடிக் கொண்டிருக்கும் மக்கட்கு அவற்றைப் பெறும் மார்க்கத்தையும் சௌகரியத்தையும் ஏற்படுத்திக்கொள்ளத் தூண்டும் தொண்டு ஊழியமாகாதா? "அந்நிய அரசாங்கம் போய்விடவேண்டும், நாமே நம்மை ஆளவேண்டும்" என்று அசந்தர்ப்பமாகச் சொற்பொழிவுகள் நிகழ்த்துவதுதானா உண்மை ஊழியம்? என்ற விஷயத்தை நேயர்கள் சிந்திப்பாராக.

தற்காலம் நமது தேசத்தில் கிராமாந்தரங்களில் செய்ய வேண்டிய வேலைகள் எத்தனையோ இருக்கின்றன. கிராமாந்தரமக்கள் தற்கால உலக விவகாரங்களையே அறிந்துகொள்ள முடியாத நிலைமையிலிருக்கின்றனர். 100-க்கு 99 கிராமங்களுக்கு இன்னும் வர்த்தமானப் பத்திரிகைகளே எட்டவில்லை. ஆரம்பக்கல்வியும் சரியான பலனைத்தந்து வரவில்லை. இந்த ஈன ஸ்திதியில் தேசமுன்னேற்றம் தேச விடுதலை எங்கேயிருந்து குதித்துவிடும்? ஆனால் தேசத்துக்காகப் பாடுபடுவோர் கூட்டத்துக்குக் குறைவில்லை.

சாதாரண மக்களுடைய உள்ளங்களைப் பண்படுத்தத்தக்க தொண்டர்கள் தற்காலம் கிளம்பவேண்டும். இவர்கள் பிற நாட்டு முன்னேற்ற வரலாறுகளைத் தெரிந்தவர்களா யிருக்கவேண்டும். இவர்கள் தங்கட்கென ஒரு சங்கங்கண்டு அதன் ஆதரவில் கட்டுப் பாடாகக் கொஞ்சக்காலம் கிராமாந்தரங்களில் வேலைசெய்தால் கூடிய விரைவில் நல்ல பலனை எதிர்பார்க்கலாம். சென்னையில் இளைஞர்களின் பேரால் இரண்டொரு சங்கங்கள் இருக்கின்றன. அவை நாம் குறிப்பிட்ட முறையில் தொண்டாற்றுவதாகச் சொல் லக்கூடவில்லை; பொருள் முட்டினாலோ, சிரத்தைக் குறைவினாலோ தங்களுக்கு வேண்டிய யாரோ ஒவ்வொருவருக்குப் பாராட்டுதலோ வரவேற்போ அளித்துவிட்டு மறுபடியும் உறங்க ஆரம்பித்துவிடு கின்றன. இந்தச் சங்கத்தாரைக் குறைகூறவேண்டும் என்ற எண் ணத்தோடு நாம் எதையும் சொல்லத் துணியவில்லை; இவர்கள் ஏதேனும் உருவான ஊழியம் ஜனங்களுக்குச் செய்யவேண்டு மென்றே ஆசைப்படுகிறோம். இச்சங்கத்தார் விரைவில் ஜில்லா, தாலூகா, கிராம சங்கங்களை ஏற்படுத்தத் தீவிர முயற்சி எடுக்க வேண்டுமாய் வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறோம்.

இப்போது வேலையில்லாத் திண்டாட்டம் எங்கும் அதிக மாய்ப் பரவி வருகிறது. படித்த பட்டதாரிகள் என்ன செய்வ தென்றறியாமல் விழித்துக்கொண்டிருக்கிறார்கள். 20, 30 ரூபா சம்பளத்தில் ஏதாவதொரு உத்தியோகம் கிடைக்காதா என்பதே இவர்கள் கவலை. என்ன செய்வார்கள் பாவம்! வேறு வேலை செய்து பிழைக்க இவர்கள் கற்ற கல்வி இடங் கொடுக்கிறதில்லை. சிறிது பூஸ்திதியுள்ள ஆங்கிலங் கற்றவர்கட்குத் தங்கள் சொந்த உழவுத் தொழிலை மேற்கொள்வதற்கும் முடிகிறதில்லை. இவர்கள் எல்லாரையும் ஒன்று கூட்டிக் கட்டுப்பாடாக இவர்களைத் தொண் டாற்றச் செய்யும் ஒரு இயக்கம் நமது நாட்டுக்குப் பெரும்பயன் விளைப்பதாகும். கிராம புனருத்தாரண நிபுணர்கள் இதை ஊன் றிச் சிந்திப்பாராக.

ஆங்கிலங் கற்ற நமது வாலிபர் பிற தூண்டுதல் இல்லாமலே பொது ஜன ஊழியம் புரியவேண்டும் என்று நாம் எதிர் பார்ப் பது முடியாது. ஏனென்றால் அவர்கள் கற்றுக்கொண்ட கல்வி இத்தகைய உணர்ச்சியைக் கிளப்பிவிடக் கூடியதாயில்லை. பட்டப் படிப்பு முடிந்தவுடன் ஒரு குறிப்பிட்ட காலம்வரை ஆங்காங்கு சென்று பிரசாரம் செய்யவேண்டும் என்ற விதி சர்வகலாசாலைக் கல்வித் திட்டத்தில் இருக்க வேண்டும். பிரசார முறைகளைக் கல்வி யின் ஒரு பகுதியாக அவர்கள் முன்னரே கற்றுக் கொள்ளும்படிச் செய்ய வேண்டும். இந்த முறையைக் காரியத்தில் கொணர்ந்தால் சமூக முன்னேற்ற விஷயத்தில் ஆச்சரியமான பலனை மிகவிரைவில் அடையலா மென்பதிற் சந்தேகமில்லை.

இந்த முறையில் கல்வித் திட்டத்தில் விதி ஏற்படுத்துதல் தகுமா? சரியா? என்று பலர் கேட்சலாம். பலவிதத்திலும் இந்த விதி சரியான தென்றே வற்புறுத்துவோம். ஊழியமே சல்வியின் லட்சியமாகும். ஒவ்வொரு உயிரினிடத்தும் அன்பு செலுத்துதல் மனிதனுக்குரிய முதற்கடமை. நாம் குறிப்பிட்டபடி தொண்டு செய்யவேண்டும் என்ற உணர்ச்சியைக் கிளப்பக்கூடிய கல்வியைக் காட்டிலும் சிறந்த படிப்பு எது இருக்க முடியும்? நிற்க, இன்னொரு வகையிலும் பட்டதாரிகள் பொது ஜனங்களுக்கு ஊழியம் செய்யக் கடமைப்பட் டிருக்கிறார்கள். கல்லூரிகளும் கலாசாலைகளும் பொது ஜனங்கள் கொடுக்கும் வரிப்பணத்தாலேயே நடைபெறுகின்றன. பொது ஜனங்களின் பணமில்லா விட்டால் சர்வகலா சாலை ஏது ? பி. ஏ., எம். ஏ. பட்டங்கள் எப்படி அடைய முடியும்? ஆகையால் கல்விக்குப் பொருள் கொடுத்து உதவிசெய்த நன்றிக் காவது அவர்சள் நாட்டு மக்கட்குக் கைம்மாறு செய்யக் கடமைப் பட்டிருக்கிறார்கள் அல்லவா? தவிர,

கல்லூரிப் படிப்பு முடிந்து வெளியில் வருகின்றவர்கள் உலகியல் ஞானம் பெறவேண்டியவர்களா யிருக்கிறார்கள். நாட்டின் பல பாகங்களுக்கும் சென்று இவர்கள் சற்றிப் பார்க்கவேண்டும். அப்போதுதான் ஜனங்களின் வாழ்க்கை நிலைமையையும் தங்கள் நிலைமையையும் இவர்கள் நன்கு உணர முடியும். நேரில் காணும் பல அநுபவங்கள் இவர்சளுடைய பிற்கால வாழ்வுக்கு அநுகூலம் செய்வதாயிருக்கும். ஆதலால் இந்த வகையிலும் தங்கள் சொந்த நலங்கருதியேனும் இவர்கள் பொது ஜன ஊழியம் செய்யவேண்டியவர்களே.

அரசினரும், பொது ஜனத்தலைவர்சளும், கிராம சீர்திருத்த நோக்குமுள்ளவர்களும் நாம் மேலே எடுத்துக்காட்டிய அபிப்பிராயங்களைக் கவனிப்பார்களாக.

நகரங்களில் மாத்திரம் மேடைகளில் நின்று ராஜீய விஷயங்களையோ பிறவற்றையோ ஊக்கத்தோடு பேசிவிடுவதால் எவ்வளவு பலன் விளைந்துவிடும்?

காங்கிரசும் பிற பொதுச் சபைகளும் இவ்வளவு காலம் வேலை செய்தும் கிராமாந்தர ஜனங்களுக்குப் பத்திரிகை படிக்கும் ஞானங்கூட ஏற்படுத்த முடியவில்லை. ஆதலால் உண்மையாகப் பொது ஜன ஊழியம் புரிய விரும்புவோர் வீணுகக் கழியும் ஆங்கிலப் பட்டதாரிகளின் சக்தியை ஒன்றுகத் திரட்டி நாட்டு முன்னேற்ற விஷயத்தில் பிரயோகிக்க முயற்சி செய்வாராக.

ஓம் தத் ஸத்.

---

# தேசீயக் கல்வி என்றால் என்ன?

சேலம் எஸ். சிவராமன், பி. ஏ., எல். டி.

நம் தேசத்தில் சிறந்த ஞானமும் யோசனையும் ஊக்கமும் உடைய மேலோர் பொதுவாக வழங்கிவருகிற இளைஞரது கல்வியில் மிகுதியும் அதிருப்தி கொண்டு, தேசத்திற்குப் போதுமான நன்மையைத் தரக்கூடிய கல்லூரிகள் ஏற்படுத்த முயன்றிருக்கிறார்கள். உதாரணமாக, கவி ரவீந்திரநாத தாகூர் வங்காளத்தில் சாந்திநிகேதனமென்னுமிடத்தில் ஓர் கலாசாலை ஸ்தாபித்திருக்கிறார். மகாத்மா காந்தி குஜராத் வித்யாபீடம் என்ற கலாசாலையை ஓங்கச் செய்வதில் கண்ணும் கருத்துமாயிருக்கிறார். தவிர, தேசத்திலுள்ள சகல பெரியோர்களுமே தற்காலக் கல்வி தேசத்திற்கு இசைந்ததல்லவென்றும், தேசீயக்கல்வி வேண்டுமென்றும் கோருகிறார்கள். இப்பொழுது உள்ள கல்வி எப்படி தேசீயமானதல்லவென்றும் தேசீயக் கல்வி என்றால் என்ன என்றும் இங்கு ஆராய்வோம்.

கல்வி என்பது சிறுவனைத் தக்க மனிதனாக்கும் சாதனம். ஒவ்வொரு சிறுவனையும் அவன் வயதான பிறகு அவனுடைய சமூகத்திற்கும் தேசத்திற்கும் எவ்வளவு பயன்படக் கூடுமோ அவ்வளவு பயன் படும்படி பயில்விப்பது தான் கல்வியின் கடமை. சிறுவர், மானிடர் சமூகத்தில் வாழ வேண்டியவர்; சமூகத்தாலேயே பலன்களை அடையவேண்டியவர்; சமூகத்தாலேயே உயர்வும் சமூகத்தாலேயே தாழ்வும் அடையும் இயற்கையுடையவர்; ஓர் தேசத்திலுள்ள ஒவ்வொருவரும் தேசத்தின் பொது நலத்தைக் கருதி உழைத்து, தேசத்தையும் கூட உயர்த்தும் மார்க்கங்களில் தங்கள் சுய நன்மையைத் தேடினால் தான் அத்தேசமும் ஓங்கும்; அதிலுள்ள ஒவ்வொருவரும் ஓங்குவர். ஆகவே சமூகத்தையும் தேசத்தையும் முன்னேறச்செய்யும் கல்வியே தக்க கல்வி.

அத்தகைய கல்வி தேசத்திற்குத் தேசம் வேறுபடல் வேண்டும். ஒவ்வொரு தேசமும் ஒவ்வொரு வகையான பெருமையை விருத்தி செய்திருக்கிறது. ஒவ்வொரு தேசத்திலும் தொன்று தொட்டு சிற் சில சிலாக்கியங்கள் தோன்றி, அவை அதன் ஜனங்களால் கொண்டாடப்பட்டு அவர்களுடைய பெருமைக்குக் காரணமாயிருக்கின்றன. உதாரணமாக, ஆங்கிலேயரின் விசேஷ மேன்மைகள், தைரியம், புதுமை தேடல், மதாபிமானம், தேசாபிமானம், சுதந்திரதாகம் முதலியன. இக்குணங்களே அவர்களுடைய பொதுப்பெருமைக்கு வேர்களாயிருக்கின்றன. ஆகவே, ஆங்கிலச்சிறுவர்களின் கல்வி அத்தேசீய குணங்களை வளரச்செய்வதாயிருக்க வேண்டும். அதேமாதிரி நம் புராதனம்பொருந்திய இந்தியாவில் என்ன விசேஷ சிலாக்கியங்கள் தோன்றி வளர்ந்திருக்கின்றனவோ, எவை நம் பூர்வ பெருமைக்கு ஊற்றாயிருந்தனவோ, எவை இனி வரும் மேன்மைக்கும் ஆதியாய் இருப்பனவோ அவற்றை நம் இளைஞர்களுக்குப் பயிற்றுவித்தால்

தான் நாம் கொடுக்கும் கல்வி நம்முடைய சமூகத்திற்கும் நாட்டிற்கும் ஏற்றதாகும். இதுவே தேசியக் கல்வியின் இலட்சணமாகும்.

ஓர் தேசத்தின் பெருமையைப் புகட்டக்கூடியவற்றில் அதன் இலக்கியமும் (Literature), சரித்திரமுமே முக்கியமானவை. இலக்கியத்தில் தான் ஓர் தேசத்தின் பலகால உயர்ந்த இலட்சியங்களும் யோசனைகளும், அது பிரத்தியட்சத்திற் கொணரமுயன்ற உத்தம எண்ணங்களும் (Ideals) செறிந்து கிடக்கின்றன. சரித்திரத்தில் தான் ஓர் தேசத்தின் உன்னத இலட்சியங்களை நிறைவேற்ற முயன்ற பெரியோர்களின் செயல்கள் கூறப்படும். ஆகையால் இவ்விரண்டும் ஓர் தேசக்கல்வியின் முக்கிய அம்சங்களாய் இருக்கவேண்டும்.

நம் நாட்டின் தற்காலக் கல்விமுறையில் தேசஇலக்கியமும் சரித்திரமும் திருப்தியான நிலையில் இல்லை. பாஷையில் ஆங்கிலமும் சரித்திரத்தில் ஐரோப்பிய சரித்திரமும் இப்பொழுதுள்ள கல்விமுறையில் பிரதானம் பெற்றிருக்கின்றன. தேசபாஷையிலும் தேசசரித்திரத்திலும் ஊக்கமும் அபிமானமும் போதுமான அளவு உண்டாகவில்லை. அப்படிவிடாது, கல்வி அதிகார வர்க்கத்தினரும் உபாத்தியாயர்களும் மாணவர்களும் அவற்றுக்குப் பிரதானம் கொடுத்தால் தான் இப்பொழுது உள்ள கல்வி தேசியக்கல்வியாக மாறக்கூடும்.

இலக்கியத்தைப்போதிப்பதில் சிறந்த யோசனை காட்டப்படவேண்டும். இலக்கியத்தால் என்ன விசேஷங்கள் இளைஞருக்குப் புகட்டப்படவேண்டுமோ அவ்விசேஷங்களைப் புகட்டக் கூடிய நூல்கள் தெரிந்தெடுக்கப்படவேண்டும். அப்படியில்லாத ஓர் குறைக்கு உதாரணமாக, முதியோர்களால் மட்டும் ரசமனுபவிக்கக்கூடிய துறவறப்பாடல்கள் சிறுவர்களுக்குத் தற்காலம் அமிதமாகப் போதிக்கப்படுகின்றன. உலகத்தின் அனுபவங்களுக்குப் பேராவாக்கொண்ட வாலிபர்களுக்கு உலகத் துறவின் போதனை யாது பயன்தரும்? உலக அனுபவங்களுக்கு ஓர் நேரிய வழி காட்டினாலல்லவா அவர்களுக்குப் பயன் உண்டாகும்?

சரித்திரபோதனையிலும் மிகுந்த சீர்திருத்தம் அவசியம். சரித்திரம் என்பது அரசர்கள் சிம்மாசனம் ஏறினதேதியும் இறந்ததேதியும் யுத்தங்கள் ஆரம்பித்த முடிந்த தேதிகளும் உடன்படிக்கைகளுடைய அம்சங்களும் மட்டும் கொண்டதல்ல. இவை ஓர் அற்பமுக்கியமேயானவை. சரித்திர போதனையின் விஷயம் தேசத்தின் பலகாலப் பெரியோர்களின் இலட்சியங்களும் செயல்களும் ஜனங்களின் நாகரீக அபிவிருத்தியுமாக இருத்தல் வேண்டும்.

ஆகவே, தேசியக்கல்வி என்பது ஓர் தேசத்தின் விசேஷ பெருமையில் அதன் வாலிபர்களைப் பழக்குவதே. அத்தகைய கல்வியாக்க, தேசிய இலக்கியமும் தேசிய சரித்திரமும் பிரதான அம்சங்களாக்கப்பட்டுத் தக்க வழிகளில் போதிக்கப்படவேண்டும்.

---




# ஸ்ரீயுத - லாலா லஜபதி ராய்.

(S. V. வரதராஜையங்கார்.)

எந்நாட்டில் அடிமைக்குணத்தின் ஆதிக்கம் வேரூன்றியிருக்கிறதோ அங்கு விடுதலைக்கு வேலையில்லையாம். விடுதலையின்மையால் வறுமையும் துயரமும் வளர்தல் இயல்பேயாகும். ஆதலின் வேண்டுவதென்னை? பௌருஷம்—வீரம். வீரத்தால் அடையத்தக்கது விடுதலை; அதாவது சுதந்திரம். நம் தாய்நாட்டின் விடுதலைக்கு வழிகாட்டிகளாய் அவதரித்த அற்புத புருடர்களுட் சிறந்தவர் லாலா லஜபதிராய். இப்பெரியாரின்

## பிறப்பும் இளமையும்

பெருமை யுடையன. இவர் 1865-ம் ஆண்டின் இறுதியில் லுடியானாவைச் சேர்ந்த ஜெகரான்பூரில் பழம்புகழ் படைத்த அகர்வார பன்னிய குலத்தில், முன்ஷி ராதா கிருஷ்ண லாலா அவர்களின் திருக்குமாரராய் உதித்தவர். வீரத்தாய்மார்களே நிறைந்த பன்னியகுல ஸ்திரீ ரத்னங்களில் இவரது அன்னை நல்லிலக்கணங்களனைத்தும் அமையப் பெற்றவர்; குடும்ப நிர்வாகத்தில் நிகரற்ற நிபுணத்துவம் வாய்ந்தவர். இவருடைய தந்தை ஓர் ராஜாங்க பாடசாலையில் பாரசீக, உருதுபாஷா பண்டிதராயிருந்து, பல நூல்களியற்றி, ஞானியென்று பெயரெடுத்தவர். இவருடைய நான்கு புத்திரருள் பாஞ்சால சர்வகலாசாலையில் பி. ஏ. பரீக்ஷையில் தேர்ந்த இரண்டாவது குமாரர் அப்போதே காலஞ் சென்றார்.

லஜபதியின் கல்விப்பயிர்ச்சிக் காலமெல்லாம் வெகு சிறப்பாய்க் கழிந்தது. கீழ்த்தரப்படிப்பு முடிவானதும் அவர் லாகூர் அரசாங்கக் கல்லூரியில் பரிசு பெற்று போஷணை மாணவராகக் கல்வி பயின்றார். பஞ்சாப் சர்வகலாசாலை சட்டப்பரீக்ஷையில் தேர்ந்து அவர் 1883-ல் அதாவது பதினெட்டாம் வயதிலேயே பொருளீட்டத் தொடங்கினர்; அக்காலத்தில் அவருக்கு குருதத்த வித்தியார்த்தி, லாலா ஹான்ஸ் ராஜ் என்ற இரு மஹான்களின் சம்பந்தம் ஏற்பட்டது. அந்நாளில் சுவாமி தயானந்த சரஸ்வதியின் ஆரிய சமாஜ இயக்கம்பரவி சமரச உணர்ச்சியைக் கொடுத்துக்கொண்டிருந்தது. மேற்கூறிய மூவரும் அவ்வியக்கத்திற் சேர்ந்து, திரிகரண சுத்தியுடனும் ஆர்வலோடும் உழைக்கலாயினர். வயதால் அவர்கள் சிறியோராயினும் செய்கையாற் பெரியோரெனப் பெயர் படைத்தனர். அதில் லஜபதி, பாஞ்சால நாடெங்கும் சுற்றிக் கூட்டங்கூட்டி, சபைகளை ஸ்தாபித்து, பிரசுரங்களை வழங்கி அரும்பாடுபட்டுவர்தார். அதிகம் கூறுவானேன்!—ஆரிய சமாஜம் பாரதபூமியில் ஏதேனும் நற்காரியங்களைச் சாதித்திருக்குமானல் அதன்

பெருமைக்குப் பாத்திய முடையவர் லஜபதியே யாவர். அந்நாள் முதல் அவருடைய

## வீரமும் சீலமும்

விளக்க முற்றன. வக்கீலாய் சன்னது பெற்றபின் லஜபதி பாஞ்சால நாட்டின்கண்ணுள்ள ஹிசார் எனும் நகர் வாசியானூர். நல்ல கல்விமான்களின் கூட்டுறவும் அவருக் கேற்பட்டது. அவர் 1892-ம் ஆண்டுவரையில் ஹிசாரில் பிரபல நியாயவாதியாயிருந்து பொருளும் புகழும் சம்பாதித்ததன்றி, அந்நகர பரிபாலனத் தலைவராகவும் மூன்றாண்டுகள் சேவைசெய்து பொது ஜனங்களின் வாழ்த்திற்கு உரியாராயினர். அந்நாட்களில் அவருக்கு நியாயவாதத் தொழிலில் நல்ல வருமானமும், சட்ட நிபுணரென்ற பெருமையும் ஏற்பட்டன. பேராசையும், பொருளுக்காகத் தம்மை அடிமைப்படுத்திக் கொள்ளும் தாழ்ந்த குணமும் அவரிடம் இல்லாமையால், அவர் எப்பொழுதும் ஞானநூல்களையும், இலக்கண இலக்கியங்களையும் கற்பதில் தமது காலத்தைப் பெரும்பாலும் செலவுசெய்தார். அப்பால், 1892-ல் லாகூர் பெரிய நீதிமன்றத்தின் நியாயவாதிகளில் முக்கியஸ்தராய், லாகூரிலேயே தொழில் நடத்தி வசிக்கலானூர். அதன்பின், அவர் இடை யிடையே நோயால் பீடிக்கப்பட்டாராதலின் வருமானம் குறைய வாரம்பித்தது. அவர் மிகுதியும் ஈடுபட்ட தேசவூழியமும் அவரது வருவாய் குன்றியதற்கொரு காரணமாகும். வித்யாபிவிருத்தி, சமய வளர்ச்சி ஆகிய துறைகளில் அவர் முன்னணியில் நின்றுழைககலாயினர். 1896-ம் வருடம் ஜூன் மாதம் 1-ம் தேதி லாகூரில் ஸ்தாபிக்கடபெற்ற தயானந்த வைதீக வித்யாசாலைத் (காலேஜ்) திறப்பு விழாவில் அவர் எடுத்துக்கொண்ட சிரமம் அளவற்றது. அக்கலாசாலையின் ஸ்தாபிதத்திற்கு மூலதனமாகக் கிடைத்த பொதுஜன நன்கொடைத்தொகை ஐந்து லக்ஷரூபாயும் லஜபதியின் உழைப்பாலேயே சேர்ந்தது. அவர் அதன் உதவி அக்கிராசனர் பதவியைப் பன்னிரண்டாண்டுகள் வகித்திருந்தார்; அக்கல்விச்சாலையின் காரியதரிசியாகவும் சரித்திர போதகாசிரியராகவும் தொண்டியற்றினூர். ஜலந்தர் சமஸ்கிருத கலாசாலைக்கு அவர் காரியதரிசியாக விருந்து அதற்குத்தக்க மூலதனத்தைத் தேடிவைத்தார். 1905-ல் அமெரிக்கர்களின் கல்வி முன்னேற்ற வழிகளை அறிந்துவரும்பொருட்டுச் சென்று வந்தார். ராஜீய விஷயமாக ஸ்ரீகோபால கிருஷ்ண கோகலேயுடன் அவர் அகில பாரத ஜனங்களின் பிரதிநிதியாய் இங்கிலாந்துக் கேகினூர்; இங்குவந்தபின்னர் மேனூடுகள் சென்று, சமூக, ராஜீய வித்தியாபி விருத்தி விஷயங்களில் பயின்று வரக்கூடிய வாலிபர்களைத் தயாரிப்பதற்காக கழகமொன்றையும் ஏற்படுத்தினூர். நிற்க, லாலாஜியின்

## அநாதரக்ஷணார்த்த வேலை

அவனியிலும் பெரியதாகும். தேசத்தில் பஞ்சத்தாலும் காலரா பிளேக் முதலான கொள்ளை நோய்களாலும் ஜனங்கள் உழல்வதுகண்டு மனமிரங்கித்

தமது பூமிகளை விற்றும் பிச்சை எடுத்தும் அவர்களைக் காப்பாற்ற முற்பட்டார். அனாதைகளான குழந்தைகளையும் பிணியாளர்களையும் அங்கஹீனர்களையும் சாஸ்வதமாக ரக்ஷிக்க ஓர் ரக்ஷண சாலையையும் அக்கணமே நிறுவினர்; ஆரிய சமாஜத்தின் பரோஜ்பூர் அநாதரக்ஷகக் கிளைச்சங்கத்தின் காரியதரிசியாக விருந்து ஆயிரக்கணக்கான அகதிகளைக் காப்பாற்றத் தேவையான மூலதனத்தைச் சேகரித்தார். 1897, 1899, 1900 ஆண்டுகளில் ஹிந்து அகதிரக்ஷணைக்காக மிகவும் வருந்தி இரண்டாயிரம் மக்களைக் காப்பாற்றினர். 1901-ம் வருடம் ராஜாங்கத்தாரால் நியமிக்கப் பெற்ற பஞ்ச நிவாரண ஆலோசனைச் சபையில் அவர் தக்க சாக்ஷியங் கொடுத்தார். 1905-ம் ஆண்டில் காங்கரா ஜில்லாவில் பூமி அதிர்ச்சியால் பெருத்த சேதமும் நஷ்டமும் ஏற்பட்டன. அச்சமயம் லாலாஜி லாகூர் ஆரிய சமாஜத்தின் ஆதரவில் செய்த உதவியும் ஊழியமும் கொஞ்சமல்ல. தாமே நேரில் பிணியாளர்களுக்குச் சிகிச்சை செய்வதும், உடையற்றவர்களுக்கு ஆடை வழங்குவதும், பயப்படுவோரைத் தேற்றுவதுமாக அவர் இரவும் பகலும் பாடுபட்டார். அவருக்கு ஏழைகளிடம் ஏற்பட்ட காருண்யத்தையும், தர்ம சிந்தனையையும் அரசாங்கம் முதல் அனைவரும் மெச்சிப் புகழ்ந்தார்கள். இனி, அவருடைய

## பொதுநல ஊழியம்

எத்தன்மைத் தென்பதைச் சுருக்கிக் கூறுவோம். லஜபதிக்குப் பலதொழில், வியாபார நிலையங்களின் சம்பந்தமுண்டு. 'பஞ்சாப் நாஷனல் பாங்'கின் அதிபரும் அவரே. அநேக பஞ்சாலைகளில் அவர்கூட்டு முதலாளியாயிருப்பர். இவைபற்றி அவருக்கு வருமானமும் அதிகமுண்டு. இவ்வருமானத்தின் பெரும்பகுதியை ஏழைகட்கே உதவுவார். அவரது எழுதும் வன்மையினை என்னென்று புகழ்வோம்! பத்திரிகாசிரியராக அவர் பல்லாண்டுகள் உருது மொழியில் ஓர் பாதாந்த சஞ்சிகையையும் வாரப் பத்திரிகையையும் நடத்திவந்தார் அம்மொழியில் மாஜினி, சிவாஜி, சுவாமி தயானந்த சாஸ்வதி, ஸ்ரீ கிருஷ்ண முதலிய புண்ய சரித்திரங்களைப் பக்திச் சுவைகனி சொட்டச் சொட்ட எழுதினர். ராஜீய தேசீய விஷயமாக அவர் பிரபல ஆங்கிலப் பத்திரிகைகளுக்கு அவ்வப்போது சேர்ந்த கட்டுரைகளை வரைந்து வந்தார். பண்டித குருதத்த வித்தியார்த்தி, எம்.ஏ. அவர்களின் சரித்திராம்ருதத்தை அவர் ஆங்கிலத்தில் எழுதிப் பிரகரித்தார்; ஆரிய சமாஜத்தின் சரித்திரத்தைக் காலவரையறைப்படி எழுதினர்.

வரவர ராஜீயத்துறையில் நாடு விழிப்படைய லஜபதியும் அதன்கண் தீவிரமாய்ப் பிரவேசித்து உழைக்கலானர். அவர் முதல் முதலாக 1888-ல் அலகபாத்தில் கூடிய காங்கிரஸ் மஹா சபையில் கலந்து கொண்டார். அக்காலந்தொட்டு அவர் தேசத்திற்கு எழுத்தாலும், சொல்வன்மையாலும் பொருளாலும் புரிந்து வரும் முதவி எண்ணில. 1905-ம் வருஷத்திய அகில இந்திய காங்கிரஸ் மகாசபையில், பிரபல தேசபக்தர்கள் அவரது உழைப்பைப் பகிரங்கமாகப் பாராட்டி, அதன் அங்கத்தினராக இந்திய மக்களின் குறைகளை எடுத்துச்சொல்லத் தேர்ந்தெடுத்த பிரதிநிதிகளுள் ஒருவராக அவரையும் தேர்ந்தெடுத்து இங்கிலாந்திற் கனுப்பினர். பஞ்சாப் ஹிந்துசபை அவரது பிரயாணச் செலவிற்காக ரூ 3000 அளித்தது. அப்பொருளை அவர் எடுக்காமல் ஏழைகட்கு வழங்கி, தமது சொந்தச் செலவிலேயே இங்கிலாந்துக்குச் சென்றார்; பிறகு அவ்விடமிருந்து அமெரிக்காவுக்கு ஏகினர்; பின்னர் மீண்டும் இங்கிலாந்தையடைந்து ஸ்ரீ கோபால கிருஷ்ண கோகலேயுடன் சிலகாலம் சேர்ந்துழைத்துவந்தார். இங்கிலாந்தின் ஒவ்வொரு முக்கிய நகரத்திற்குஞ் சென்று

இந்திய ஜன சமூகத்தின் குறைகளை ஐரோப்பிய ருள்ளத்திற் பதியும்படி பிரசங்கித்தார். அப்பால், அவர் இந்தியாவுக்கு வந்து தாம் மேல்நாடுகளில் கண் கூடாகக் கண்டதொழில் விருத்தி விஷயங்களை விரித்துரைத்து, தொழிற் சாலைகளை ஸ்தாபித்து சுதேசப்பொருள் விருத்தியில் ஊக்கம் ஏற்படச் செய்தார். 1905-ம் ஆண்டு காசியிற்கூடிய காங்கிரஸ் மகாசபையில் லஜபதிராய் தமது மேற்றேய அனுபவங்களையும் சீர்திருத்த அபிவிருத்தித் துறைகளையும் தெளிவுற உணர்த்தினர். அவருடைய பிரசங்கங்களனைத்தும் என்றும் ராஜவிஸ்வாஸம் ததும்பியவையாகவே யிருந்தன.

## நாடு கடத்தல்

பஞ்சாப் ராஜாங்கத்தார் அவருடைய பிரசாரத்தையும், நோக்கங்களையும் குற்றமுடையனவாகக் கருதினர்கள். லாலாஜியும் பிறராஜீய ஒத்துழைப் பார்களும் ஏதோ ராஜாங்கத்திற்கு எதிராக அந்தரங்க சூழ்ச்சிசெய்து வந்ததாகக் குற்றஞ்சாட்டப் பட்டார்கள். லாலாஜி எடுத்தோதிய சமாதானங்கள் சரியானவையென்று அரசாங்கத்தார் நினைக்கவில்லை. உடனே சட்டங்கள் புறப்பட்டன. தலைவர்கள் கைது செய்யப்பட்டார்கள். ராவில்பிண்டியில் அளவுக்குமீறின வரி உயர்த்தப்பட்டது. குடியேற்ற மசோதா, நிலபாராதீன சட்டசீர்திருத்த மசோதா, வாய்க்கால் வரியுயர்த்தும் மசோதா முதலிய மசோதாக்கள் போதாத காலத்திற்குத் தோதா யெழுந்தன. தீவாந்தர சிக்ஷை விதிக்கப்பட்டு லாலாஜி அமெரிக்காவுக்கு அனுப்பப் பட்டார்.

பரம காருண்ய சீலரான லார்ட் மின்டோ பிரபுவுக்கு உண்மை விளங்கிற்று. அரசப்பிரதிநிதியான அவர் ஆய்ந்தோர்ந்து குடியேற்ற மசோதாவை ரத்துசெய்தார். கிளர்ச்சி யடங்கிற்று. விரைவில் லாலாஜியும் இந்தியாவுக்கு வர அனுமதியளிக்கப் பெற்றார். அவரை

## என்றும் வாழ்க

வென்று பாரதவாசிகள் ஆசி கூறினர்கள். அவருடைய நுணதிசயங்களைக் கூறு மிடத்து அவர் என்றும் உற்சாக முடையவர்; இரக்க முடையவர். சிறந்த அரசியல்வாதி; நியாயவாத நிபுணர்; பொருள்களைப் புண்ணிய தேச சேவைக்கென விநியோகிக்கும் விமலர்; ஆராய்ந்து பேசும் அன்பர்; சீர்திருத்த சீலர்; ஆர்ய சமாஜ சூர்யர்; அவருக்கிணை அவர்தான். யுக்தா யுக்தங்களால் படிப்படியாக தேசநலம் பெருகும் வழிகளை ஓர்ந்துணர்த்தும் அவ்வுத்தமர் விடுதலையாகி மீண்டும், உற்சாகத்துடன் உழைக்கவாரம்பித்தார். அவர் தலைவர் பதவி வகிக்க வேண்டுமென்றோ, மகாஜனங்கள் தம்மைத் துதிக்க வேண்டுமென்றோ கனவிலும் கருதாதவர்; தமது அகில இந்திய காங்கிரஸ் அக்கிராஸனர் பதவியை அவர் ராஷ் பிகாரி கோஷ் அவர்களுக்கு அளித்த தன்மையே இதற்குப்போதிய சான்றாகும். அதன்பின், அவர் பன்முறை இங்கிலாந்துக்கும் அமெரிக்காவுக்கும், ஏனைய ஐரோப்பிய நாடுகளுக்குஞ் சென்று இந்தியாவின் குறைகளை எடுத்தோதி வந்தார். ராஜீய அரங்கத்தில் இப்பெரியார் அன்றுமுதல் இன்றளவும் ஓர் சிங்கமாக 'பழம்புலி' யாய் விளங்குகிறார். சமீபத்தில் அவர் சென்னைமாகாண மெங்கும் சுற்றுப் பிரயாணஞ் செய்து சிறப்பாக மலையாளத் தீண்டாதார் நிலைமையையும் பொதுவாகத் தென்னாட்டு நிலைமையையும் அறிந்து சென்றார். வயதால் அவர் முதியவரா யினும் உழைப்பால் என்றும் யௌவனரேயாவர். இப்பெருந்தகையைப் புகழ எத்தனை நா படைத்தாலும் இயலுமோ? அவர் ஆயுள் பெருக ஆரோக்ய திடகாத்திரராய் வாழ பாரதேவி பரிபூர்ண கிருபை பாலிப்பாளாக.

# ஹேண்டல் என்னும் ஐரோப்பிய இசை அரசன்.

E. V. சிங்காரவேலு முதலியார், பி. ஏ.

[முற்பகுதிச் சுருக்கம்:—ஹேண்டல் ஒரு ஜெர்மன் நாவித வைத்தியனின் குமாரர். 1685 வருஷம் ஹாலி நகரத்தில் பிறந்தார். டாக்டர் ஹேண்டல் அவனைச் சிறந்த நியாய வாதியாகவும் மந்திரியாகவும் செய்யத் தீர்மானித்தார். பையனுக்கு வாத்தியத்தில் அதிக பிரேமை உண்டு. அதை வெறுத்த தந்தை அவனை ஐந்து வயதிலேயே பள்ளிக்கு அனுப்பினர். சிறு ஹேண்டலின் மன மாறுதல் அவன் தாய்க்கு அதிக சஞ்சலத்தைக் கொடுக்க அவள் அவனுக்கு புருஷனுக்குத் தெரியாமலே வாத்தியம் வாசிக்கும் தந்திரம் செய்தாள்.]

## உலகம் உறங்கும் போது பையனின் கீதமுழக்கம்.

ஹாலி நகரத்தில் ஓர் நடுநிசி. ஊர் அடங்கி எந்த விதமான அரவமும் இல்லாத ஓர் இரவு. வீதிகள், வீடுகள் எங்கும் ஒரே இருள் பரந்திருந்தது. சகல ஜீவராசிகளும் உயிர் நீத்த பிரேதங்கள் போல் அசைவற்று உறங்கியிருந்தன. ஒரு வீட்டிலாயினும் தீபம் சுடர்விட்டெரிந்ததாகத் தோன்றவில்லை. இப்படி நிசப்தம் குடி கொண்டிருக்கும் நள்ளிரவில் இரண்டடுக்குள்ள மெத்தை வீட்டின் ஓர் அறையில் மட்டும் ஏதோ வெளிச்சமும் ஓசையும் கிளம்பியதாகத் தென்பட்டது. அங்கு ஓர் உயிர் மட்டும் உறக்கங் கொள்ளாது வீணை போன்ற ஓர் இன்னிசைக்கருவியை மீட்டிக் கொண்டு, அதனால் எழும் நாதத்தில் உற்சாகமும் பரவசமுமடைந்திருந்தது. இவ்வுயிர் தான் சிறு ஹேண்டல் என்று நண்பர்கள் அறிவார்கள். இச்சிறுவன் ஒருவரும் அறியாமல் எல்லோரும் அயர்ந்து நித்திரா தேவியின் வசமாயிருக்கும் சமயம் மேன் மாடிக் கோபுரத்தை அடைந்து தினந்தோறும் தனது கைசோர்ந்து மனம் திருப்தியும் சமாதானமும் பெறும்வரை வீணை பழகி வருவான். அந்தப் பழைய பியானோவைக் காட்டிலும் வேறு சிறந்த வாத்தியக் கருவி அவனுக்கு அச்சமயத்தில் கொடுத்திருக்கமுடியாது. அப்பியானோ இனிமையான நாதத்தைக் கிளப்பி இன்பம் கொடுக்கும். அதேசமயத்தில் அதன் சப்தம் அந்த அறையிலேயே அடங்கிவிடும். இதனால் அவனுடைய தந்தையாவது பிறராவது இதை அறிந்து கொள்ள ஏதுவில்லை. ஆனால் அவனது சுகத்தைத் தனது உயிராகக்கொண்ட அன்னையும், அவன்மேல் அளவிலாப் பிரேமையுள்ள அத்தையாகிய அன்னாவும் இதை அறிவர்.

இவ்வாறு இரண்டு ஆண்டுகள் கழிந்தன. ஹேண்டலுக்கு இப்போது வயது ஏழு. ஒருநாள் டாக்டர் ஹேண்டல், ஹாலி நகரின் அருகில் நாற்பது மைல் தூரத்திலுள்ள ஒரு ஊரில் ஜான் அடால்ப் என்னும் வாலிபப்பிரபுவையும், அவருடைய காரியதரிசியான தன் உறவினர் ஒருவரையும் காணச் செல்ல ஆயத்தமானர். யாராவது வீட்டில் நன்கு பழகினவர் ஒருவர் வீட்டை

விட்டு வெளியூருக்குப் புறப்படும்போது தாமும் உடன் செல்ல ஆசைப்படுவது குழந்தைகளின் இயற்கை. ஆகவே பிரடரிக்கும் தன் தகப்பனாரிடம் தன்னை அழைத்துச் செல்ல வேண்டினான். அதற்கவர் மறுத்து தாம் மட்டும் செல்ல வண்டியில் ஏறி உட்கார்ந்தனர். வண்டி சுமார் இரண்டுமைல் தூரம் சென்றிருக்கும்; அப்போது சிறு ஹேண்டல் தந்தைக்கு முன்னின்றான். அவருக்குத் தெரியாமலே வண்டியைப் பிடித்துக் கொண்டு அவ்வளவு தூரம் ஓடிவந்திருந்ததற்காக அவர் அவனைத் திட்டி, வண்டியை நிறுத்தச் சொல்லி ஏற்றிக் கொண்டார். அவனை வீட்டிற்குத் தனியே அனுப்ப அவர் மனம் ஒவ்வவில்லை. ஆதலின் அவனைச் சமஸ்தானத்திற்கு இட்டுச் சென்றார். சமஸ்தானப்பிரபு ஓர் சிற்றரசர். அங்கே பல மேதாவிகள் குழுமி யிருந்தனர். அவ்விடமிருந்த கவிஞர்களும், சங்கீத சாஸ்திர நிபுணர்களும், வாத்தியம் வாசிப்பதில் சிறந்தோரும், மற்றுமுள்ள மேதாவிகளும் பையனுடைய சங்கீத ஞானத்தையும், இயற்கையாய் அமைந்துள்ள மேம்பாட்டையும், அவன் பார்வையிலிருந்தும், செய்கைகளிலிருந்தும் கண்டு ஆச்சரிய மடைந்து அவன் பேரில் அபாரமான பிரியம் கொண்டனர்.

அன்று ஆதிவாரம். யாவரும் வேத கீதம் பாடுவது வழக்கம். டாக்டர் தன் குமாரனுடன் அங்கு வந்திருந்தார். கீதக் கோஷ்டி கலைந்தவுடன் அவரவர் தத்தமது காரியங்களைக் கவனிக்க சென்றனர். ஆனால் தன் தந்தைக்குத் தெரியாமல் அவரிடமிருந்து மெதுவாக நழுவிப் பெரிய வாத்யக் கருவி யிருக்கும் கீதசாலையை அடைந்தான் ஹேண்டல். அங்கு கொஞ்ச நேரத்திற்கு முன்னர் பெரியவ ரொருவர் அதை வாசிக்கும்போதே இவன் எண்ணம் பூராவும் எப்படியாவது அதைத் தானும் வாசிக்க வேண்டுமென்று அதன்பேரிலிருந்தது. இப்போது அவன் அந்தக் கருவியை நெருங்கி அங்கு போடப்பட்டிருந்த நாற்காலியில் தாவி ஏறி உட்கார்ந்து வாசிக்க ஆரம்பித்தான். நாதம் வெகு இனிமையாய் கிளம்பிற்று. அவனது இன்பம் அவனை மறக்கச்செய்தது. மென்மேலும் இயக்க ஆரம்பித்தான். அப்போது அவ்வழிவந்த சங்கீதப்பிரிய இளவரசர் அதைக் கேட்டுப் பிரமிப்பு அடைந்தார். அச்சிறுவனது ஞானத்திற்கு வியந்து அவர் டாக்டர் ஹேண்டலிடம் சென்று "இக் குழந்தைக்கு இசையில் அபாரமான இயற்கை ஞான மிருக்கிறது. நான் இதுவரையில் இவ்வளவு இளவயதில் இவ்வளவு சங்கீத ஞான முடையவரைக்கண்டதே இல்லை. நீர் அவசியம் இக்குழந்தைக்கு அதில் பயிற்சி யிரும்படி செய்விக்க வேண்டும்" என்று கூறினார். முதலில் ஜார்ஜ் பிரடரிக் ஹேண்டலின் தந்தை அதற் கிசையவில்லை. ஆனால் அப்பிரபு "பையனைச் சங்கீத வித்வானிடம் அனுப்புவதாக வாக்குறுதி தந்தா லொழிய உம்மைப் போகவிடேன்" என்றார். கடைசியாக அரை மனதுடன் "ஆகட்டும், நீங்கள் சொல்லியவாறே செய்கிறேன்; ஆனால் அவனது பள்ளிக்கூடப் பாடங்களுக்கு எந்த விதத்திலும் கெடுதி விளைக்காமல் இருந்தால் தான் உத்திரவு தருவேன்" என கவின்று குமாரனையும் உடன்கொண்டு தமது இல்லமேகினார் பண்டிதர்.

## அரசன் சந்தோஷிக்கவும், பேராசரியர்கள் பிரமிக்கவும் செய்த பையன்.

தந்தை சொற்றுறவாது கஷ்டப்பட்டுத் தன் பாடங்களைக் கற்று வந்தான் பையன். அவனை அவர் கீதம் கற்றுக்கொள்ள ஓர் ஆர்கன் வாத்தியப் பண்டிதரிடம் அனுப்பினார். அதிவிரைவில் அவரிடமிருந்து அறிந்து கொள்ள வேண்டியவை யாவற்றிலும் அவர் அதிசயிக்கும் வண்ணம் பையன் தேர்ந்து வந்தான். வாத்தியம் வாசித்தல் மட்டும் அவனை அவ்வளவு பெருமைப்படுத்தி யிருக்காது. அத்துடன் அவன் ஓசைக்குத் தகுந்த பாக்களியற்றும் சக்தியையும் சிறு பொழுதிலேயே பெற்றிருந்தான். நாதன் கோயிலில் பாடவேண்டிய வேத கீதம் வெகு அழகுபட எழுதித் தன் ஆசிரியரிடம் கொடுத்தான். பத்து வயதா யிருக்கும் போதே பையன் உயர்ந்த இசை நிறைந்த, சாரம் கொண்ட இன்பம் பயக்கும் பாடல்கள் பல எழுதினான். அவை அவனுடைய கவிவன்மை யையும், சங்கீத சாமர்த்தியத்தையும் விளக்கின. இவ்வளவு இளவயதில், மொசார்ட்டும், பீதோவனும், தியாகராஜரும் இவ்வளவு பூரண அழகுடன் கீதங்க ளியற்றவில்லை. மூன்று ஆண்டுகள் அவ்வூர் உபாத்தியாயரிடமிருந்து கற்றுக்கொள்ளவேண்டிய யாவற்றையும் சிறுவன் அறிந்தான். பின்னும் அதிக பாண்டித்யம் பெறப் பேரவாக் கொண்டான்.

ஜெர்மனி தேசத்தின் பிரதான அல்லது தலைமையான நகரம் பெர்லின். அது சகல கலாவல்லவர்களுள்ள கழகங்கள் பலவற்றைக் கொண்டது. வெகு அழகான பட்டணம். நுணுக்கமானவற்றை விளக்கமாகக் கற்பதற்கும், பட்டங்களைப் பெறுதற்கும் ஜனங்கள் அங்கு செல்வது வழக்கம். 1696 வருஷம் அவ்விளைஞன் தன்னை அங்கு இட்டுச் செல்லுமாறு தன் தந்தையை வேண்டினான். அவர் அதற்கொருவாறு இசைந்தார். ஹேண்டல் அங்குற்று அடைந்தது என்ன? வெற்றியன்றிப் பிறிதொன்றில்லை. கீதத்தில் அபூர்வ சக்தியைக் கொண்ட பையனைக் கண்ட ஜெர்மனி மகாராஜாவும் மகாராணியும் அளவுகடந்த அன்புகாட்டி அவனைத் தங்கள் அரண்மனைக்கு வரவேற்று உபசரித்தனர். அங்கு பரிசு பெற்றுப் பெயருடன் விளங்கிய சமஸ்தான புலவர் சிகாமணிகள் இவனது சங்கீத நிபுணத்துவத்தைக் கண்டு ஒருங்கே வெட்கத்தையும் பேராச்சரியத்தையும் அடைந்தனர். ஹேண்டலின் பேரில் அதிகப் பிரியம் கொண்ட மகாராஜா அவனை இட்டாலி தேசத்திற்கு அனுப்பி அவனது சங்கீதக் கல்வியைப் பூர்த்தி பெறச் செய்யவும் திரும்பி வந்தவுடன் தனது அரண்மனை (சமஸ்தான) வித்வானாக வைத்துக்கொள்ளவும் அனுமதி தருதல் வேண்டுமெனவும் செப்பினார். அரசியும் அதுவே சரியென்று ஆமோதித்தாள்.

ஆனால் அந்த ஹாலி சர்ஜன் அதற்குச் சுலபத்தில் ஒத்துக் கொள்ளுகிறவரா? அவர் வெகு பிடிவாதக்காரர். உலகானுபவத்தில் முதிர்ச்சி பெற்றவர். சமஸ்தான சங்கீதவித்வானைக் காட்டிலும் மந்திரி பன்மடங்கு அதிக செல்வாக்கு (அதாவது மதிப்பு அதிகாரம்) உடைத்தவன் என்பதை அவர் நன்குணர்ந்திருக்கிறார். புலவர் வறுமையும், பணத்தின் பெருமையும் அறிந்த அவர் அதற்கு ஒத்துக் கொள்வாரா? இந்த உலக செல்வாக்கைக் கருதி பேராசை யுடையவரல்லர் என்று வைத்துக் கொண்டபோதிலும் அவர் மூப்படைந்து காடு வா வா வீடு போ போ எனவிருக்கும் காலத்தில் தன் அருமந்த புதல்வனை எவ்வாறு பிரிந்து தூரதேசத்திலிருக்க அனுப்புவார்? அதுவுமன்றி அவன் தாய் எப்படி அச்சிறுவயதுப் பையனைப் பிரிந்திருக்க ஒப்புவாள்? அப்

படியிருந்தும் மந்திரியாகவாவது சட்ட நிபுணனாகவாவது பையனைச் செய்ய வேண்டும் என்ற கனவு அவரை விட்டு நீங்கவில்லை. ஆதலின் அவர் அரசாது வேண்டுகோளுக் கிசையாது தன் மகனைக் கூட்டிக்கொண்டு ஹாலி நகரம் வந்தார். ஒரு வருஷம் எவ்விதமான பெரும் சம்பவமு மில்லாமல் ஒழிந்தது. டாக்டர் ஹேண்டல் அவ்வாண்டி னிறுதியில் மண்ணுலகை நீத்து விண்ணுல கேகினர்.

## ஹேண்டலின் தீர்மானம்.

ஒருவனுடைய குண அமைப்பிற்கு முக்ய சாதனங்கள் அவன் தாய் தந்தையர் சிநேகர் கல்விகேள்வி முதலியன. நற்குணம் உடையவனாதற்கு அவன் சிறு போழ்திலேயே தாயினிடத்திலும் வீட்டிலுள்ளவரிடமுமிருந்து கற்றுக் கொள்கிறான். பெரும்பாலும் தாய்மார்களே குழந்தை மேம்பாடுடையவனாதற்குக் காரணம். சரித்திரத்தில் சிவாஜி அவ்வளவு உன்னத நிலைக்கு வந்தது அவனது தாயின் உபதேசமும் நல்வளர்ப்பும் என்று கூறப்பட்டிருக்கிறது. ஆதலின் தாய்மார்களின் உதவி ஒரு குடும்பமாவது அல்லது நாடாவது முன்னேற்ற மடைதற்கு இன்றியமையாதது. நல்ல குணவதிகளே, கல்வி ஞான முடையவர்களே, உலக அநுபவமுதிர்ச்சி உடையவர்களே நல்ல சற்புத்திரர்களைத் தேசத் தொண்டர்களாகப் பெறுவார்கள். நமது ஹேண்டலின் குணமாண்பிற்கு அவருடைய தாய்தான் காரணம் என்பதிலையமில்லை. அவ்வம்மையார் கணவன் துஞ்சினதும், குழந்தைகளைப் பாதுகாக்கும் பொறுப்பு அவளுக்கு முன்னிலும் அதிகமாயிற்று. ஹேண்டலும் அவரிரு சகோதரிகளும் அவளது ஜாக்கிரதையான பாதுகாப்பில் வளர்ந்து வருவாராயினர். பிற்காலத்தில் மேன்மை தரும் பல நற்குணங்களும் ஸ்திர புத்தியும் இக்காலத்தில் தான் தாயிடத்திலிருந்து ஹேண்டல் பெற்றார்.

தனது பிரியப்படி செய்யாது தந்தையின் இஷ்டம்போல் சிறுவன் சர்வ கலாசாலையில் சட்டக்கல்வி கற்க ஆரம்பித்தான். இருந்தபோதிலும் இவனது இயற்கை நாட்டம் கீதத்தில்தா னிருந்தது. சட்டம் பயிலும் காலத்திலும் அதிகநேரம் கீர்த்தனைகள் எழுதுவதில் போக்குவது வழக்கம். இவனுடைய கீர்த்தனைகள் இவனுக்குப் பெரும் பிரக்யாதியை அளித்தன. சீக்கிரத்தில் ஹாலி கோயிலில் ஆர்கன் வாசிப்போராக ஹேண்டல் தேர்ந்தெடுக்கப்பட்டார். இப்போது இவர் சட்டக்கல்வி இசைபாடுதல் என்ற இருதொழிலையும் மேற்கொண்டார். இக்காலத்தில் இவரது கவிவன்மையைக் கேள்வியுற்ற சர்வகலாசாலை மாணவர் பலர் இவரை அண்டி சங்கீதம் பயின்று வந்தனர். அவர்களுக்கு ஹேண்டல் பல இனிய கீதங்கள் பாடித்தந்தனர். இரண்டு காரியங்கள் ஓர் சமயத்தில் செய்வது அவருக்கு கஷ்டமாயிருந்தது. வேனிற் காலத்தில் ஒருநாள் காலையில் வீட்டில் உட்கார்ந்து ஆழ்ந்த சிந்தனையுடனிருந்தார். அப்போது அவர் மனதில் பல எண்ணங்கள் தோன்றி சஞ்சலத்தைக் கொடுத்து மறைந்தன. கடைசியாகத் தாம் சட்டக் கல்வியை விட்டு சங்கீதம் பயின்று அதில் பெயரெடுக்க வேண்டும்; அஃதில்லாவிடின் சும்மா அடங்கியிருப்பது என்ற தீர்மானத்திற்கு வந்தனர். அந்தச் சிறு பட்டணம் அதற்குத் தகுதியானதல்ல ஆதலின் சங்கீதம் அதிகம் பயிலப்படும் ஹேம்பர்க்கிற்குச் சென்று அங்குள்ள இசை நாடக சபா ஒன்றில் இரண்டாவது வீணை வாசிப்போராக அமர்ந்தனர். இதுதான் அவர் ஜீவிய வேலைக்கும் பின்வரும் பிரக்யாதிக்கும் ஆரம்பம் என்றுகூறலாம். (தொடரும்)

---



# ஆரியசித்தாந்தம்.

(293-ம் பக்கத் தொடர்ச்சி.)

## உலகஞானம்

### சிவானந்த சாகர யோகீஸ்வரர்.

பொய்யான நிந்தனைகளாலும், கொடுஞ் சொற்களாலும் மூடர்கள் புத்திமான்களை வருத்தப்படுத்தப் பார்ப்பார்கள். இப்படிச்செய்து புத்தியீனர்கள் புத்திசாலிகளுடைய பாபத்தை அபகரிக்கிறார்கள். அறிவுள்ளவர்கள் பொறுமையாயிருப்பதில்லை. துஷ்டர்களுக்கு எரிச்சலேபலமாயிருக்கிறது. குற்றவாளிகளைத் தண்டிக்கிறசட்டமே அரசர்களுக்குப்பலமாகும். சபலசித்தமே ஸ்திரீகளுக்குப்பலம். புண்ணியவான்களுக்குப் பொறுமையே பலம். பேச்சை அடக்குவது வெகுகஷ்டம். அர்த்தம் நிறைந்ததும், கேட்பவர்களுக்கு இனிமை தருவதுமான பேச்சைப் பேசுவது அரிது. நன்றாய்ப் பேசப்படுகிற சம்பாஷணை அளவில்லாத பலனைத்தரும். கெட்ட பேச்சுக்களைப் பேசுவது தீமைக்கே காரணமாகும். அம்பினாலே பிளக்கப்பட்ட அல்லது கோடரியால் வெட்டப்பட்டமரம் மீண்டும் வளரும். அவமானமான வசனங்களால் புண்பட்ட இருதயம் ஒருபோதும் புண்ணாறிச் சுகமடையாது. அம்பு, ஈட்டி, சூலம் முதலியன சரீரத்தில் தைத்தால் எளிதிற் பிடுங்கிவிடலாம்; இதயத்தில் தைத்த கொடுஞ்சொல்லாகிய ஆயுதம் ஒருபோதும் எடுக்கப்படுவதில்லை. சொல்லம்பு வாயினால் எய்யப்படுகிறது. அதனால் அடிப்பட்டவர்கள் இரவும் பகலும் துக்கப்படுவார்கள். ஆகையால் புத்தியுள்ளமனிதர்கள் சொல்லம்பைப்பிரயோகிக்கக்கூடாது. ஏனென்றால் அவர்கள் பிறரை வருத்தப்படுத்தக்கூடாதல்லவா? விதியால் தோல்வியடைந்தவனுடைய புத்தி போய்விடுகிறது. அதனாலே அவன் இழிவான காரியங்களையெல்லாஞ் செய்கிறான். அறிவு மழுங்கும்போது அழிவு சமீபத்தில் வருகிறது. அதனால் தப்பிதங்களெல்லாம் சரியாகவே தோன்றும். அரசனே! நீர் இதைச் சரியாய் அறியவில்லை. உமது மந்தபுத்தியினாலே பாண்டவர்கள் துன்பம் அடைந்திருக்கிறார்கள் என்றார்.

அரசன்-பேரறிவுள்ளவிதுரா! தர்மத்தையும் அர்த்தத்தையும்பற்றி எனக்கு இன்னமும் சொல். நீ சொல்வனவெல்லாம் ஆநந்தமாயிருக்கின்றன. கேட்கக் கேட்க ஆசை தணியவில்லை என்றான்.

விதுரர்-தீர்த்தங்களிலெல்லாம் ஸ்நானம் செய்வதும், சகல பிராணிகளிடத்திலும் அன்பாயிருப்பதும் சமபலனைத்தரும். அவற்றுள் ஜீவகாருணியமே சிறந்ததாயிருக்கிறது. எதுவரைக்கும் ஒருவனுடைய புண்ணிய கருமமும் உலகத்தில் பேசப்படுகிறதோ அதுவரைக்கும் அவன் சொர்க்

கத்தில் சுகமாய்வசிப்பான். ஆகையால் புண்ணியகருமமே செய்யத்தக்கது. இந்த விஷயத்தில் கேசினியையவரித்த விரோசனன் சுதன்வா என்ற இருவருடைய சரித்திரம் திருஷ்டாந்தமாகக் கூறப்படுகிறது.

முன்னொருகாலத்தில் கேசினி என்ற அழகானகன்னிகை ஒருத்தியிருந்தாள். அவள் ஒப்பற்ற அழகுள்ளவள். அவள் நல்ல கணவனை அடைய விரும்பிச் சுயம்வரம் நியமித்தாள். திதிவமிசத்தில் பிறந்த விரோசனன் அந்தக் கன்னிகையை அடையுமாறு அவ்விடத்துக்குப் போனான். கேசினி அவனை நோக்கி விரோசனா! க்ஷத்திரியர் அந்தணர் இருவருள் உயர்ந்தவரானென்று கேட்டாள். விரோசனன், நாங்கள் பிரஜாபதிவமிசத்தில் பிறந்தவர்கள். ஆகையால் நாங்களே சிறந்தவர்கள். சகல பிராணிகளுக்கும் நாங்களே மேலானவர்கள் சந்தேகமில்லாமல் இந்த உலகமே எங்களுடையது. ஆகையால் தேவர்கள் யார்? அந்தணர் யார்? என்றான். கேசினி அப்படியானால் நீ இங்கேயேயிரு; நாளைக்குச் சுதன்வா வருவான்; நீங்கள் இருவரும் சேர்ந்து உட்கார்ந்திருப்பதைப் பார்ப்பேன் என்றாள்; விரோசனன் அப்படியே நாளைக் காலையில் நானும் சுதன்வாவும் ஒரே ஆசனத்தில் உட்கார்ந்திருப்பதைப் பார் என்றான்.

இரவு கழிந்து சூரியோதயமாயிற்று. கேசனியும் வீரோசனனும் காத்துக் கொண்டிருந்தார்கள். அப்போது சுதன்வா வந்தான். விரோசனன் கேசினியிருவரையும் கண்டான். கேசினி அந்தணனாகிய சுதன்வாவுக்கு அர்க்கிய பாத்தியங்கள் கொடுத்து உபசரித்து ஆசனத்தில் உட்காரச் சொன்னாள். விரோசனன் சுதன்வாவைத் தன்னுடன் ஒரு ஆசனத்தில் உட்காரும் படி கேட்டான். சுதன்வா, பிரகலாத குமாரனே! உன் சொர்ண ஆசனத்தை நான் தொட்டாலும், அதில் உட்கார்ந்தாலும் உனக்குச் சமானமாக மதிக்கப்படுவேன். ஆதலால் நான் அதில் உட்காரமாட்டேனென்றான். விரோசனன், சுதன்வா! மரப்பலகையும், மிருகத்தின் தோலும், தருப்பைப் புற்பாயும், வைக்கோலாசனமுமே நீ உட்காரத்தகுந்தவை. ஆகையால் நீ எவ்விதத்திலும் என்னுடன் ஒரு ஆசனத்தில் உட்காரத்தக்கவன் அல்லவென்றான். சுதன்வா, விரோசனா! பிதாவும் குமாரனும், ஒத்தவயதும் ஒத்த படிப்புமுள்ள இரண்டு அந்தணர்கள், இரண்டு க்ஷத்திரியர்கள், இரண்டு வைசியர்கள், விருத்தர்களான இரண்டு சூத்திரர்கள் இவர்கள் ஒரே ஆசனத்தில் சேர்ந்து உட்காரக்கூடும். இவர்களைத்தவிர மற்றவர்கள் உட்காரக் கூடாது. உன்பிதா எனக்கு மரியாதை செய்கிறார். நான் உட்காருகிற ஆசனத்துக்குத் தாழ்ந்த ஆசனத்தில் உட்காருகிறார். நீ குழந்தையாயிருப்பதினாலும் செல்வமாய் வளர்க்கப்பட்டமையாலும் இதை அறியவில்லை என்றான். விரோசனன், சுதன்வா! சொர்ணம், பசு, குதிரை என்னிடத்தில் இருக்கின்றன ஆகையால் நானுயர்ந்தவன் என்றான். பின்னும் விரோசனன், சுதன்வா! உன் தங்கம், பசு, குதிரை முதலியன உன்னிடத்திலிருக்கட்டும், இந்தக் கேள்விக்குத் தகுதியுள்ளவர்களைப் பதில் கூறும்படி கேட்போம். இந்த விஷயத்தில்

நாம் நமது பிராணனையே பந்தயம் வைத்துக் கேட்போம். தக்கவர்கள் மறு மொழி சொல்லட்டும் என்றான். விரோசனன், நமது பிராணனைப் பந்தயம் வைத்துவிட்டு யாரிடம் போய்க்கேட்பது; தேவர்களிடத்திலும் மனிதர்க ளிடத்திலும் நான் வரமாட்டேன். அவர்கள் எனக்குத்தாழ்ந்தவர்கள் என் றான். சுதன்வா, நாம் பிராணனைப் பந்தயம் வைத்து விட்டு உன் பிதாவி னிடம் போய்க் கேட்போம். ஏனென்றால் பிரகலாதன் தன் புத்திரனுக் காகக்கூடப் பொய் சொல்ல மாட்டார் என்றான். விரோசனன் சரியென்று ஒப்புக்கொண்டான்.

இப்படிப் பிராணனைப் பந்தயம் வைத்துக்கொண்டு இருவரும் பிரகலாத னிடம் போனார்கள். அவர்களிருவருக்கும் கோபம் மிகுந்திருந்தது.

பிரகலாதன் இவ்விருவரும் சேர்ந்து வருவதைப் பார்த்தான். இவ் விருவரும் முன்பு ஒருபோதும் சேர்ந்துவந்ததில்லை. இப்போது சேர்ந்து வருகிறார்கள். கோபங்கொண்ட இரண்டு சர்ப்பங்களைப்போல வருகிறார் கள். ஒரே பாதையில் வருகிறார்கள். என்னகாரணமோ தெரியவில்லை என்று நினைத்துக்கொண்டு அவர்களை நோக்கி நீங்கள் இருவரும் முன்பு ஒருபோதும் சேர்ந்திருந்ததில்லை. இப்போது இருவரும் கூடிவருகிறீர்கள். ஏ விரோசனா! நீங்கள் இருவரும் சினேகிதர்களா வென்று உன்னைக்கேட்கி றேன் என்றான். விரோசனன், எனக்கும் சுதன்வாவுக்கும் சினேகிதமில்லை. நாங்களிருவரும் எங்கள் பிராணனைப் பந்தயம் வைத்துக்கொண்டு வந்திருக் கிறோம். இராட்சத சிரேஷ்டரே! நான் உம்மை ஒரு கேள்வி கேட்கிறேன். அதற்குப் பொய்யான மறு மொழி சொல்லக்கூடாது என்றான்.

பிரகலாதன் சுதன்வாவுக்காகத் தண்ணீரும் தேனும் கொண்டுவர வேண்டும். அந்தணரே! உமக்காக நல்ல பசு வொன்று விட்டிருக்கிறேனென் றான். சுதன்வா, தண்ணீர் தேன் தயிர் இவைகளை நான் வரும் வழியிலேயே பெற்றுக் கொண்டேன்; நான் உம்மை ஒரு கேள்வி கேட்கிறேன். நீர் உண்மையைச் சொல்லவேண்டும். நான் உயர்ந்தவனா? இந்த விரோசனன் உயர்ந்தவனா? என்று கேட்டான். பிரகலாதன், அந்தணரே! இவன் எனக்கு ஒரே குமாரன்; நீரும் எனக்கு எதிரில் வந்திருக்கிறீர். நீங்களிருவரும் சண்டை போட்டுக்கொண்டு வந்திருக்கிற இந்த விஷயத்தை என்னைப் போன்றவர்கள் எப்படித் தீர்க்கத் துணியக்கூடும்? உமக்குப் பசு முதலிய வஸ்துக்கள் இதோ இருக்கின்றன. இவைகளைப் பெற்றுக் கொள்ளும் என் றான். சுதன்வா, உமக்குரிய பசு முதலிய சிறந்த வஸ்துக்களை உமது புத்திர னுக்குக் கொடும். நாங்களிருவரும் எந்த விஷயத்தைப் பற்றி வழக்கிட்டு வந்திருக்கிறோமோ அந்த விஷயத்தில் உண்மையைச் சொல்லும் என்றான். பிரகலாதன் ஏ ஹம்ஸ! தரும சூட்சுமமானது சிவப்போ, கறுப்போ, கபில வருணமோ அறியோம். பசுவின் பால் தாரையிலும் சிறிது; ஆகையால் நான் அதை எப்படிச் சொல்லக்கூடும் என்றான். சுதன்வா, நீர் உண்மையைச்

சொல்லாவிட்டால் உமது தலை வெடிக்கும் என்றான். பிரகலாதரே! நாக் குத்தவறுகிறவனும் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லாதவனும், பொய் அல்லது சத்தியம் இவைகளைப் பேசாமலிருக்கிறவனும் எந்த இடத்தை அடைவான்? இதைப்பற்றி உம்மைக் கேட்கிறேன் என்றான்.

பிரகலாதன், நாக்குத்தவறினவன் ஒரு ஸ்திரீ தன்கணவன் சக்களத்தி யுடன் கூடியுறங்குகிறதைப் பார்த்து அந்த இரவை எப்படிக் கழிப்பாளோ அதுபோலவும், சூதாட்டத்தில் திரவியத்தை யிழந்தவனைப் போலவும், தாங்க முடியாத சுமை யேற்றப்பட்டுவருந்துகிற எருதைப்போலவும் துன்பத்தைக் கொடுக்கும் இடத்தை அடைவான். அன்றியும் சத்துருவானவன் கோட்டை வாயிலைக் கைப்பற்றிக் கொண்டபோது ஒரு அரசனுடைய மனம் என்ன பாடுபடுமோ அதுபோலவும் வருந்தும் இடத்தை யடைவான். பொய்ச் சாட்சி சொல்கிறவன் பகைவர்களாலே சதா துக்கத்தையே யடைவான். ஒரு மிருகத் தின் விஷயத்தில் பொய் சொல்கிறவன் தன் பிதிர்களில் ஐந்து பேரைச் சொர்க்கத்தினின்றும் நரகில் வீழ்த்துகிறான். ஒரு பசு விஷயத்தில் பொய் சொல்லுகிறவன் பத்துப்பிதிர்க்களை நரகத்தில் வீழ்த்துகிறான். ஒரு குதிரை விஷயத்தில் பொய் பேசுகிறவன் நூறு பிதிர்க்களை நரகத்தில் தள்ளுவான். ஒருமனிதன் விஷயத்தில் பொய் சொல்கிறவன் ஆயிரம் பிதிர்க்களைச் சொர்க்கத்தினின்றும் நரகத்தில் வீழ்த்துவான். சொர்ணவிஷயமாகப் பொய் பேசுகிறவன் பிறந்திருப்பவர்களும் இனிப் பிறக்கப் போகிறவர்களுமான எல்லாப் பிதிர்க்களையும் நரகத்தில் தள்ளுவான். பூமி விஷயமாகச் சொல்லப் பட்ட பொய் எல்லாவற்றையும நாசம் செய்துவிடும். ஆகையால் பூமி விஷ யத்தில் பொய் பேசவே கூடாது என்றான்.

அதன்பின் விரோசனனை நோக்கி விரோசனு! ஆங்கிரசன் என்னைவிட மேலானவன். இந்தச் சுதன்வா உன்னிலும் மேலானவன். சுதன்வாவி னுடைய தாயார் உன்தாயாரைவிட மேலானவள். நீ சுதன்வாவினுல ஜயிக் கப்பட்டாய். இந்தச் சுதன்வா இப்போது உன் ஜீவனுக்குத் தலைவன் என்று சொல்லிவிட்டுச், சுதன்வாவை நோக்கி அந்தணரே! விரோசனனுடைய ஜீவனைக் கொடும் என்று கேட்டான். சுதன்வா, பிரகலாதரே! நீர் தர்மத்தை அனுசரித்து நடந்தீர். கெட்ட எண்ணத்தினால் பொய் சொல்லவில்லை. உமக்கு அருமையாயிருக்கிற விரோசனனுடைய ஜீவனைக் கொடுத்தேன். உமது புத்திரன் இதோ இருக்கிறான். ஆயினும், இந்த விரோசனன் கேசினிக்கு முன்னால் என் பாதங்களைக் கழுவவேண்டும் என்று சொன்னான். அரசரே! பூமியின் விஷயமாகப் பொய் பேசுவது உமக்குத் தகுதியல்ல என்றார். பசுக்களுக்குப் பின்னால் தடியை எடுத்துக்கொண்டு போகிற இடையனைப் போலத் தேவர்கள் பொய் பேசுகிறவனைக் காப்பாற்ற மாட்டார்கள். ஆயி னும் அவர்கள் அறிவைக்கொடுத்துக் காப்பாற்றுவார்கள். தன்னுடைய தருமத்துக்கும் நீதிக்கும் தக்கபடியே அவன் தன் காரியங்களில் சித்தி பெறுகிறான். பொய் பேசி ஜீவிக்கிறவனை வேதம் இரட்சிக்க மாட்டாது. பட்சிகள் தங்கள் கூட்டைவிட்டு ஓடிப்போவதுபோல வேதமும் மரணகாலத் தில் அவனை விட்டுப் போகின்றது. மதுபானம், சண்டை, பலபேர்பகை, விவாகத்தைப்பற்றின வழக்கு, குடும்பக் கலகம், இராஜதுரோகம், புருஷன் மனைவிகளைப் பற்றிய கலகம் இவைகள் பாபிகளுடைய மார்க்கங்களாகும்; இவைகளை அறிவுள்ளவன் விலக்க வேண்டும். ஜோதிடன், வர்த்தகன், திருடன், வேடன், வைத்தியன், சிநேகிதன், விகடன் இவர்களைச் சாட்சி களாகக் கொள்ளக் கூடாது. (தொடரும்)

# கடற் காட்சிகள்

## அற்புதப் படைக்கல மீன்.

சு. வேங்கடசாமி நாயுடு.

பிரபஞ்சம் ஒரு அற்புதக் களஞ்சியம், பகவானது லீலாவிநோதம். சிருஷ்டி விநோதங்களை மானிடர் முழுவதுங் கண்டு களித்தல் அரிது. தற்காலத்தில் மேனாட்டார் உலகியல் அற்புதங்களைக் கண்டு பிடிப்பதில் சிரத்தை செலுத்தி வருதல் உலகம் அறிந்த விஷயம். ஒவ்வொரு துறையிலும் ஒவ்வொருவர் தங்கள் உடல் பொருள் ஆவிகளை அர்ப்பணம் செய்து பூலோக விசேஷங்களையும் வானுலக அற்புதங்களையும் வியக்கத்தக்க வண்ணம் ஆராய்ச்சிசெய்து வெளியிட்டு வருகிறார்கள். ஆனால் நீண்டகாலம்வரை சமுத்திரங்களிலுள்ள அற்புதங்களைக் கண்டுபிடிக்கவேண்டிய சாதனங்கள் தெரியாமலிருந்தன. மேலோட்டாகக் கண்ட சில செய்திகளையே குறிப்பிட்டிருந்தார்கள். தற்காலத்தில் இயந்திர உதவியால் கடல் முழுவதையும் சுற்றிப் பிரயாணம் செய்யவும், ஆழமாக மூழ்கவும் சௌகரியங்கள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. இதன் பலனாகக் கடற்காட்சி விவரணங்கள் நாளடைவில் ஏராளமாகக் கிடைத்திருக்கின்றன. பூலோக அதிசயங்களைக் காட்டிலும் நீருலகிற் காணும் அற்புதங்கள் மிக விசித்திரமானவையென்று தெரியவந்திருக்கிறது. சமுத்திரத்திலும் விலங்கினம், பறப்பன, ஊர்வன புழுக்கள் தாவரங்கள் முத்து முதலிய மணிவகைகள் நிறைந்திருக்கின்றன. ஆகையால் சமுத்திரத்தை ஒரு பொருட்காட்சிச் சாலையென்றே சொல்லவேண்டும். அவற்றுள் சில அற்புதக் காட்சிகளை நமது அரும்பெறல் ஆனந்த போதினியில் தொடர்ச்சியாக வெளியிடக் கடவோம்.

ஆங்கிலத்தில் "கோல்டன் பிளீஸ்" (Golden Fleece) என்னுங் கதையில் "ஆர்கோனாட்" என்ற பெயருள்ள படைக்கலத்தின் பிரஸ்தாபம் வந்திருக்கிறது. இது நெடுந்தூரம் பல அபாயங்களுக்குத் தப்பித்துப்போய் க்ஷேமமாய் திரும்பிவந்து சேர்ந்தது. கடல் மீன்களுள் ஆபத்தில் தப்பித்துக்கொள்வதில் இதைப்போன்ற வகை ஒன்றுண்டு. இது எட்டுக்கால் மீன் (Cuttle Fish) இனத்தைச் சேர்ந்தது. இந்த ஜாதிமீன் சாமானியத்தில் எதிரிகளிடம் அகப்பட்டுக்கொள்ளாது; இதன்மீது ஒரு ஓடு மூடிக்கொண்டிருக்கும்; பார்வைக்கு அருவருப்பானது; ஆனால் பகைப்பொருள்களுக்குச் சிக்காமல் நெடுந்தூரம் அதிவிரைவாக நீந்திச் செல்லும் சக்தி இதற்குண்டு. இம்மீனுக்கு இரண்டு பக்கங்களிலும் இறகுகள் இருக்கின்றன. இவற்றை வேண்டும்பொழுது ஓட்டிற்குள் இழுத்துக்கொள்ளவும் வெளிவிடவும் அதற்கு முடியும். நீந்தும் பொழுதுகூட இம்மீன் உள்ளேயே இருப்பதால் கூர்ந்து நோக்கினால்தான் இது இருப்பது தெரியும். நீந்திச்

செல்ல வேண்டுமென்றால் இம்மீன் தன்னுடைய ஓட்டிற்குள் அடக்கியிருக்கும் சிறகுகளைப் பாய்மரம்போல் மேல் பரப்பிக்கொள்ளும். பின்னர் காற்றின் உதவியைக்கொண்டு அதிவிரைவாகச் செல்லும். இவ்வுருவைக் கண்ட பிறகுதான் மனிதர்களுக்குக் கப்பல்களைச் செய்யும் எண்ணம் தோன்றினதென சரித்திரக்காரர்கள் கூறுவார்கள். விரைவாகச் செல்லுவதற்குச் சௌகரியமாகக் காற்று நிறைந்த குழாய்கள் ஓட்டைச் சுற்றிலுமிருக்கின்றன. மேலே காட்டியுள்ள படத்தைப் பாருங்கள். ஒவ்வொன்றிலும் சிறு இணைங்களைப் போன்று தோன்றும் துவாரங்கள் இருக்கின்றன.



ஆர்கோனட் (Argonaut) என்னும்
அற்புதப் படைக்கல மீன்.

இம்மீனினம் அலைகளின்மீது மிதப்பதை அடிக்கடி காணலாம். தனக்கு ஆபாயம நேரும் என்று தெரிந்தவுடன் அவயவங்களை ஓட்டிற்குள் சுருக்கிக்கொள்ளும்; அப்பொழுது நீரில் அமிழ்ந்து விடும் மேலும் இவை நீந்தும்பொழுது தம் பக்கத்தில் வருவனவற்றை மிகுந்த ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளும். ஆதலாற்றான் இவைகளைப் பார்ப்பது மிகவும் அரிதாகும்.

படத்தில் மீனுடைய இருசிறகுகளும் பாய்மரங்கள்போல் தூக்கப்பட்டிருப்பதைப் பாருங்கள். சிறகுகளின் இடையிடையே சவ்வு என்னும் இலேசான தோல் வீக்கப்பட்டிருக்கிறது. இச்சவ்வை அது எப்பொழுதும் விரித்துக்கொள்ளாது. தன்னுடைய ஓட்டிற்குள் அதைச் சுருக்கி வைத்துப் பாதுகாத்துக் கொள்ளுவதில் அதற்குக் கவலை அதிகமுண்டு. இனி அச்சவ்வின் வளர்ச்சியையும் அதனால் உண்டாகும் வேறுபலன்களையும் ஆராய்வாம்.

இச்சவ்விலிருந்துதான் மேலோடு வளர்கிறது. இவ்வோட்டைச் சுத்தப்படுத்துவதும் ஏதாவது ஒருகாரணத்தால் ஓடு நொருங்கப்பட்டால் அதை ஒன்றுசேர்க்கும் வளர்ச்சியைக் கொடுப்பதும் இச்சவ்வுதான். இக்காரியத்திற்கு வேண்டிய நிலப்பொருள்களை ஆங்காங்கு சேகரஞ்செய்துகொள்ளும் சக்தி அதன் சிறகுகளுக்குண்டு. இந்த இரகசியங்களை முதன் முதலில் படைக்கல மீனைப் பரீட்சை செய்த ஓர் பெண்மணி கண்டுபிடித்தாள். முட்டையிலிருந்து வெளிவந்ததுமுதல் இவ்வகை மீன்களை மிக ஜாக்கிரதையாக வளர்க்கலானாள். குஞ்சுமுதல் பெரிதாக வளரும்வரை அவைகளுடைய அவயவங்களின் வளர்ச்சியைக் கவனித்துவந்தாள். மீனின் முதுகு ஓட்டின் வளர்ச்சி மிகவும் தாமதமாயிருந்தது. ஆனால் வளர வளர அநேக மாறுபாடுகளை யடைந்தது. அவ்வோடு பூரணவடிவடைந்தமாத்திரத்தில் ஒரு பரிசோதனை செய்தாள். மீன் ஓட்டைச் சுக்கல் சுக்கலாக உடைத்துவிட்டு அதன்பின் எவ்வுருவடையுமென்று கவனித்தாள். மறுநாள் அதைப் பார்க்கும்பொழுது உடைபட்ட ஓட்டுச் சில்லுகளின் மூலைகளில் சிலந்திப்பூச்சி வலையின் நூல்களைப்போல் படர்ந்து ஒன்றற்கொன்று நெருங்கிப் பின்னிக்கொள்ளுவதைக் கண்டாள். இந்நூல்கள் உடைந்த ஓட்டுச் சில்லுகளின் மூலைகளினின்றும் ஊறும் ஒருவகைப் பசையால் உண்டானவை. மறுநாளைக்குள் ஓட்டுச் சில்லுகளுக்கு ஒன்றற்கொன்று ஒட்டிக்கொள்ளும் சக்தி ஏற்பட்டது. இவ்விதமே நாளுக்குநாள் கெட்டியாக ஒட்டிக்கொள்ளும் சில்லுகள் ஒரே ஓடாகச் சேர்ந்து முன்னிருந்ததுபோலவே பலமுள்ள ஓடாகிவிட்டது. இதைப் பார்த்துக்கொண்டிருந்த அப் பெண் மீனினுடைய சிறகிலிருந்துதான் பசை உற்பத்தியாகிறதென்று அறியலானாள்.



சங்குகளின் பல்வகை வளர்ச்சி.

மேலே காட்டியுள்ள படத்தைப் பாருங்கள். சாதாரணமாய் நமக்குக் கிடைக்கும் சங்குகளில் அநேக பெரிய சிறிய சிப்பிகளைப் பார்க்கின்றோம். சங்கு ஓடுகளைக்கொண்ட மீன், சிப்பிகளை மிக்க கவனத்தோடு பாதுகாத்துக்கொள்ளும். இச் சங்கு மீனினம் பெரும்பாலும் நீரடி மட்டத்தில்தான் வாழும். ஆதலால் இவை நமக்குக் கிடைப்பது அரிது. கடலிலிருந்து சிப்பிகளை எடுக்கும் பொழுதுதான் இவை நமக்கு அகப்படும்.

சங்குகளி லிருக்கும் சிப்பிகளைப் பார்க்க விநோதமாகவும் அழகாகவும் இருக்கின்றன. இச் சிப்பிகளுக்கு அநேக அறைகளுண்டு. அவை ஒன்றன்பின் னொன்றாக வளைந்து வளைந்து வளரும். நாளடைவில் தட்டையாயிருந்த சிறிய சிப்பி 3, 4, 5 சுற்றுக்களுடன் வளர்ந்து கடைசிச் சுற்றால் அகன்று விரிந்து சங்கின் பூரண உருவோடு தோன்றும். இதுதான் சிப்பியின் பூரணவளர்ச்சி.

சங்கின் அகன்று விரிந்த வளைவில்தான் மீன் வாழும். அதன் உடம்பிற்கும் ஓட்டிற்கும் பற்றுக தசை நரம்புகளும் சவ்வும் ஒட்டிக்கொண்டிருக்கும். பூரணச்சங்கு உருவமாக வளர்ந்த பிறகும் மீன் சிறகிலிருந்து பெருகும் பசையால் சிறு சிறு சிப்பிகள் வளரும். நாளடைவில் அச்சிப்பிகள் சங்குகளாகும். இவ்விதமே ஒரு சங்கிலிருந்து அநேக சிப்பிகளாகவும் அச்சிப்பிகளெல்லாம் சங்குகளாகவும் வளர்க்கச்செய்யும் பிசினைப்பெருக்கும் சக்தி இம்மீன் சிறகுகளுக்கு உண்டென்று தெளிவாக விளங்குகிறது. இச்சங்கின் அறைகள் மீனின் தசைக் குழாயால் இணைக்கப்பட்டிருக்கிறது. மீன் பெரிதாக வளருவதுடன் இக்குழாய்களும் பெரிதாய் வளரும். இவ்வற்புத ஜந்துக்களைப் பிடிப்பது அரிதாகையால் பொருட்காட்சிச் சாலைகளிலும் காணப்படுவதில்லை. முத்துச்சிப்பி எடுப்பவர்களுக்குச் சிப்பிகளோடு தப்பித்தவறி அகப்பட்டால்தான் அகப்படும். (தொடரும்.)

## சந்தா நேயர்கள் கவனிக்க.

நமது "ஆனந்தபோதினி" இறைவன் திருவருளாலும் அன்பர்களின் ஆதரவாலும் சீரும் சிறப்பும் பெற்று 14 ஆண்டுகளாகப் பல்லாயிரக் கணக்கான தமிழ்மக்கட்கு நலந் தந்து வருதல் யாவரும் உணர்ந்ததே. மக்கள் முன்னேற்றத்திற்குரிய பலதிறப்பட்ட அரிய பெரிய விஷயங்களைத் தன்னகத்தேதாங்கி ஒரு ரூபாச் சந்தாவில் சிறந்த அமைப்பில் வெளிவந்துலவும் மாத சஞ்சிகை இது ஒன்றேயாகும். ஒவ்வொரு தமிழ்மாத முதல் தேதியிலும் நமது பத்திரிகை தவறாமல் தபாலிற் சேர்க்கப்பெற்றே வரப்படுகிறது. எக்காரணத்தை முன்னிட்டும் இந்தக் கிரமம் தவறுதல் இல்லை. இஃதிங்ஙனமிருக்கச் சில அன்பர்கள் தங்கட்குப் பத்திரிகைவந்து சேரவில்லையென்றும் சிலர் காலத்திற் கிடைப்பதில்லை என்றும் குறை கூறுகிறார்கள். இது எங்கட்கு ஆச்சரியமாகவே இருக்கின்றது. நாங்கள் பத்திரிகைகளை முதல் தேதியிற் சேர்த்துவிட்டாலும் இருபதினாயிரம் பிரதிகளையும் ஒரேநாளில் அனுப்பத் தபாலாபீஸில் இரண்டொருநாள் தாமதம் ஏற்படலாம்; இவ்வளவே யொழிய பத்திரிகைகளே சேராமலிருப்பதற்கோ அதிகநாள் நீடிப்பதற்கோ காரணமில்லை. எங்கள்மீது குறைகூறும் அன்பர்கள் அந்த அந்த தபாலாபீஸ் அதிகாரிகளுக்கு விஷயந் தெரிவித்து வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளல் நலந்தருவதாகு மென்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

பத்திராதிபர்.

# வள்ளுவர் உள்ளம்.

(தோ. மு. பாஸ்கரன்.)

வள்ளுவர் குறளை முதன் முதல் கருத்தை யூன்றி வாசிப்பவர்கட்கு அவர் உலகில் காணுகின்ற உயிர்களிடத்து வைத்திருக்கும் கரைகடந்த அன்பும் அருளும் தோன்றாமற் போகா. எவ்விடத்தும் அவர்தம் உள்ளம் அருள் நிறைந்த உள்ளமாயும், அன்பு கனிந்த உள்ளமாயும் விளங்கக் காண்கின்றோம். அவர் வாய்மையின் இலக்கணம் அமைக்கப் புகுமிடத்து,

> "வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
> தீமை யிலாத சொலல்"

எனக் கூறி யிருக்கிறார்.

சாதாரணமாக நம் நாட்டறிஞரிடம், வாய்மை எனப்படுவது யாது என்று கேட்போமேயானால் உள்ளதை உள்ளவாறு சொல்லுதல் என்று சுருக்கமாய்க் கூறிவிடுவர். உள்ளதை உள்ளவாறு சொல்லுதல் என்றால் கண்டதைக் கண்டபடி சொல்லுதல் கேட்டதைக் கேட்டபடி சொல்லுதல் உணர்ந்ததை உணர்ந்தபடி சொல்லுதல் ஆகும். ஆனால் நம பொய்யில் புலவர் உள்ளதை உள்ளவாறு சொல்லுதல் வாய்மை யென்றும் உள்ளதை இல்லாதவாறு சொல்லுதல் பொய்மை என்றும் இலக்கணம் கற்பிக்க ஒருப்பட்டாரில்லை. இவ்விடத்து அவர்தம் கருத்து வேறாக நிற்கக் காண்கின்றோம். உள்ளதை உள்ளவாறு சொல்லுதல் மட்டும் வாய்மையின் இலக்கணம் என்றும் உள்ளதை இல்லாதவாறு சொல்லுதல் மட்டுமே பொய்மையின் இலக்கணம் என்றும் கொள்ளுதல் தகாது என்பதை வலியுறுத்துவதுடன் தான் சொல்லுகின்ற சொல்லால் பிறர்க்கு யாதொரு தீமையும் ஏற்படாதிருக்குமாயின் அதுவே வாய்மை எனப்படும் என்று கூறினார். உள்ளதை உள்ளவாறு சொல்லுவதால் ஏதாவது ஒரு தீமை ஏற்படுமாயின் அது வாய்மையின் பாற்படாது. இதேபோல உள்ளதை இல்லாதவாறு சொல்லுவதால் குற்றமற்ற ஓர் நன்மை ஏற்படுமானால் அது பொய்மையன்று; அதுவும் வாய்மையாகக் கொள்ளப்படும் என்ற உண்மையை,

> "பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
> நன்மை பயக்கு மெனின்"

என்பதனால் நன்கு விளக்கி யிருக்கின்றார்.

உதாரணமாக வலியிலும் செல்வத்திலும் எளியான் ஒருவனை வலியான் ஒருவன் துரத்திச் செல்கிறான் என்று வைத்துக் கொள்வோம்; சிறிது தூரம் செல்ல ஓரிடத்தில் இரண்டு பாதைகள் பிரிகின்றன. முன்சென்ற எளியான் ஒரு பாதை வழியே ஓடுகிறான். பின்சென்ற வலியான் இரண்டு பாதைகள் பிரியும் இடத்திற்கு வந்து அங்கு நின்றிருந்த ஒருவனை நோக்கி இதற்குமுன்

அவ்விடம் வந்த ஒருவன் எவ்வழிச் செல்கின்றான் என்று கேட்கின்றான். இவன்றன் தன்மையை உணர்ந்த அன்னியன் அவன் சென்ற வழியைக் காட்டாது இவ்வழிச் சென்றான் என்று தவறான வழியைக் காட்டுகின்றான். இவன் இவ்விதம் சொன்னது வாய்மையின் பாற்படுமோ? அல்லது பொய்மையின் பாற்படுமோ? வள்ளுவப் பெரியார்முன் இவ்வழக்கு வருமானால் அவர் இது வாய்மையிடத்ததே என்று கூறிவிடுவார். வள்ளுவர் உலகில் நிலவுகின்ற மக்களிடத்துக் கனிந்த அன்பு வாய்க்கப் பெற்றவரானதாலே அம்மக்களுக்கு வாய்மையின் பெயராலும் யாதொரு தீங்கும் ஏற்படலாகாது என்றதோர் அருள்நிறைந்த கருத்துடையவராய் விளங்குகின்றார்.

இதுமட்டுமன்று; உலகில் நிலவுகின்ற ஆறறிவுடைய மக்கள் மாட்டுத்தானா இவ்வளவு அருளாளராய் விளங்குகின்றார்? இல்லை இல்லை! மற்றைய எண்ணில் கோடி சராசரப் பொருள்கள் மீதும் அவரது அன்பு கனிந்து இலங்கக் காண்கின்றோம்.

> "அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
> உயிர் செகுத்து உண்ணாமை நன்று"

என்னும் அழகிய குறளில், "பரிமகம் நூறு இயற்றி வாணாசு, கன்னற் சுவை போல்" பெறுவதிலும் ஒரு உயிரின் உயிரைக் கொள்ளுதல் தகாது என்பதை எவ்வளவு உறுதியாக வலியுறுத்துகின்றார். இதுவன்றோ ஆழ்ந்த அருள்! இதுவன்றோ கனிந்த அன்பு! இது மாத்திரமன்று; உலகம் போற்றும் பெரியரான கிறிஸ்துபெருமான் "ஒருவன் உனது வலது கன்னத்தில் அடித்தால் உனது இடது கன்னத்தை திருப்பிக்காட்டு" என்று கூறியிருப்பதை நம் கிறிஸ்தவ சகோதரர்கள் பெரிதும் பாராட்டுகின்றார்கள். உண்மையே. ஆனால் தமிழ் மகனான நான் என்ன சொல்லுகின்றேனென்றால் மெது பொய்யில் புலவர், "ஒருவன் உனது வலது கன்னத்தில் அடித்தால் அவனுக்கு உனது இடது கன்னத்தை திருப்பிக் காட்டி மறுபடியும் அடிக்கச் சொல்லி அவனது கை நோவும்படி செய்யாதே; அவன் அவ்விதம் ஒருகன்னத்தில் அடித்தால் அவனது அடித்த கையை எடுத்து ஐயோ! கை நோவுமே! என்று தடவிக்கொடுத்து அக்கைக்கு உன் அன்பான முத்தமிடு" என்று கூறியிருக்கின்றார் என்று கூறுகின்றேன்.

> "இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண
> நன்னயம் செய்துவிடல்"

என்ற அருமைத் திருக்குறளுக்கு இதைவிட வேறு என்ன பொருள் சொல்லக் கூடும்? இதுவன்றோ கனிந்த அன்பு!

இதுகாறுங் கூறியவாற்றால் எவ்வாறு வள்ளுவரது உண்மை அருள் நிறைந்ததாயும் அன்பு கனிந்ததாயும் விளங்குகின்றது என்று பார்த்தோம். நிற்க, இனிமேல் அவர் அறம் நிரம்பி மறங்கடிந்த உள்ளம் வாய்ந்த பெருந்தகையாளராய் விளங்குந் தன்மையை ஆராய்வாம்.

நன்னெறி போற்றித் தீநெறி யகற்றி மக்கள் வாழவேண்டு மென்பதே பொய்யா மொழியாரின் கருத்தாகும். இதைப் பலவிடங்களில் தம்முடைய நூலுள் சுட்டிக் கூறியிருக்கிறார். தீயின் வெம்மையைவிட தீயகாரியங்களின் கொடுமை சகித்தற் கரியது என்பார்.

> "தீயவை தீய பயத்தலால் தீயவை
> தீயினும் அஞ்சப்படும்"

என்று கூறுகிறார்.

இது ஒன்றே வள்ளுவரின் உள்ளப்போக்கைத் தெள்ளிதில் விளக்கும். வள்ளுவனாரின் வாழ்க்கை வரலாறே இவர் மறங்கடிந்த மனத்தினர் என்பதற்குச் சாட்சியாகும். மனம் ஒன்றே எவ்விதக்காரிய நிகழ்ச்சிக்கும் நிலைக்களன் ஆதலால்,

"மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற."

என்று வலியுறுத்துகிறார்.

இதனால் மனத்துக்கண் மாசின்மையே அறம் என்றும், மாசுடைமையே மறமென்றும் நன்கு உணரப்படுவதோடு இவரது அறம் நிரம்பிய உள்ளத் தகைமையும் தெரிகிறது. அறம் என்பதின் இலக்கணம் யாது என்று புலவர் திருமகனை வினவினால், விரைவில் மனமாசின்மையே அறம் என்று கூறிவிடுவார். அதற்கு விளக்கமாக.

"அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா வியன்றது அறம்"

என்று கூறினார்.

பிறர் ஆக்கங்கண்டு மனம் பொறாமையாகிய அழுக்காறு, பிறரை வஞ்சித்து, அவர் பொருளைக் கரவால் கைப்பற்றக்கருதும் அவா, தகாத காரணங்களால் மனத்தின் கண்ணே நிகழும் வெகுளி, இம்மூன்று தீய எண்ணங்களையும் வெளிப்படுத்தும் தீச்சொல், இவற்றின் பயனை எழும் தீச்செயல்கள் என்ற முறையில் மன மாசுடைமை அமைந்திருக்கிறதென்றும், அம் மாசுடைமை நீக்கி, அறநெறியாம் பெருநெறி பிடித்தொழுகுவார் உள்ளமே அறமுடைய உள்ளமாய் கருதப்படும் என்பதும் இவரது கொள்கை. பொய், கொலை, களவு, கள், காமம் என்ற ஐம்பெருந் தீமைகளைக் குறித்து அவர் எழுதும் காலதது, அவரிடம் என்றுமில்லாத் தனிவீரமும் தீரமும் விளங்கக் காண்கின்றோம்.

"பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று"

என்ற குறளில்,

பொய்யாமை என்றதோர் செயல் செய்து விட்டால் வேறு அறம் செய்யத்தேவையில்லை என்று கூறிப் பொய்யாமை சிறந்த அறம் என்று வலியுறுத்துகின்றார். இவ்விதம் பொய்யாமை என்னும் அறத்திற்கு ஓர் உயர்ந்த நிலை கற்பித்து அதை ஓர் உன்னத பீடத்தில் அமைத்துவைக்கிறார். இதன் பின் கொல்லாமையை வலியுறுத்தவேண்டி.

"ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று"

என்று கூறுகின்றார்.

பொய்யாமையே சிறந்த அறம் என்று கூறி அதற்கு ஓர் உயரிய நிலை கொடுத்த பெரியார், அதன் பின் கொல்லாமையின் உயர்வை நிலை நிறுத்த, கொல்லாமை ஒன்றே சீரிய அறமாகும்; அதற்கு அடுத்தபடியாகவே பொய்யாமையைக்கொள்ளவேண்டும் என்று கூறுகின்றார். இதனால் அவர் முன் சொன்னதறகும் பின் சொல்வதற்கும் முரண்படுகின்றார் என்று கொள்ளற்க. அவர் உயிர்கள்மாட்டுக் கனிந்த அன்புடையாராதலின், கொல்லாமையே சிறந்த அறம் எனக்கொண்டார். பின்னும் கள்ளாமை என்பதை,

"உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறர் பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல்"

என்று கூறி களவு என்பதை உள்ளத்தில் நினைத்தலும் கூடத் தீது என்று அழுத்தமாக வலுயுறுத்துகின்றார். இதன் பின் கள்ளுண்ணாமை என்பதை,

"உண்ணற்க கள்ளை, உணில் உண்க சான்றோரால்
எண்ணப்பட வேண்டாதார்"

என்று கூறுகின்றார்.

இதில் இவர் காட்டுகின்ற சொல் நயம் மிக மிகப் போற்றத்தக்கது. கள்ளை உண்ணற்க; என் வார்த்தையை மீறி உண்பீர்களானால் உண்ணுங்கள்; ஆனால் பெரியோரால் எண்ணப்படமாட்டீர்கள் என்று கூறுகின்றார் "உலகம் எனபது உயர்ந்தோர் மாட்டே" என்பது விதி. பெரியோரால் எண்ணப்பட வேண்டாதார் என்பதால், நீங்கள் உலகத்தாரால் இகழப்படுவீர்கள் என்றார். இவ்விதம் அறிவூட்டிய பின்னரும், எம்மகன்தான் கள்ளுண்ணச் செல்வான்? இவ்விதம் வள்ளுவப் பெரியார் மறை பொருளுடன் மக்கள் மனது சிறிதும் நோகாதபடி அவர்கட்கு அறிவுறுத்துவனவெல்லாம், அவர் மக்கள் மாட்டு வைத்திருக்கும் அன்பை யன்றி வேறெதைவிளக்கும். இனி ஐம் பெரும் பாதகங்களிலும் கடையாய காமத்தின் காரணமாகப் பிறனில் விழைதலை அவர் வெறுக்கின்ற தன்மையும், பிறனில் விழையாமையால் சான்றோர் அடையும் புகழையும்

"பிறர்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறனொன்றோ ஆன்ற ஒழுக்கு."

என்று கூறுகின்றார்.

அன்னியனுடைய மனைவியை மனத்தினும் நினையாத பேராண்மை அறிவுடையோருக்குத் தருமம் ஆகும்; அம்மட்டோ? நிறைந்த நல்லொழுக்கமு மாகும் என்று கூறும் அவரது சொல் நயம் வெகு அழகாய் அமைந்திருக்கின்றது.

நிற்க இவ்விதம், தீய செயல்களை வெறுக்க அதிகாரத் தலைப்பில் கூட, பொய் சொல்லல், கொலை செய்தல், களவு செய்தல், கள்ளுண்ணல், பிறர்மனை நயத்தல் என்ற பிரயோகங்களைக் கூட காணவில்லை. அவர் அறம் நிரம்பிய உள்ளத்தாராயும், மறம் கடிந்த உள்ளத்தாராயும் விளங்குதலாலேதான் இப்பாதகங்களை நினைவுறுத்தும் சொற்களைக்கூடச் சொல்லாமல், பொய்யாமை, கொல்லாமை, கள்ளாமை, கள்ளுண்ணாமை, பிறர்மனை விழையாமை, என்று அறத்தின் சார்பாகக் கூறி, அவரது அறம் நிரம்பிய உள்ளத்தை மக்கட்கு எடுத்துக் காட்டுகின்றார். (தொடரும்)

## இஷ்டப் பூர்த்தி.

ஸ்திரீகளுடைய கண்களின் மேற்புறத்தில் மேகக்கூட்டங்கள் எப்பொழுதும் கூடியிருக்கின்றன. அவை பாசாங்கென்ற குளிர் காற்றானது பட்டமாத்திரத்தில் தண்ணீராகமாறி, கண்களாகிய நதிகளில் பெருக்கெடுத்து இஷ்டப்பூர்த்தி யென்னும் கடலை இமைப்பொழுதிற் சேர்ந்துவிடும்.

# "மலையாள நாட்டுக் கோயில்களின் மாண்புக் குறைகள்"

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

நாம் வசிக்கும் சென்னைமாகாணத்தை மொழிவழி பிரிப்போமாயின், ஆந்திரமாகாணம், தமிழ்மாகாணம், கேரளமாகாணம் என மூன்றிறப் பட்ட! வெவ்வேறு மாகாணங்கள் ஏற்படும். அவற்றுள், நமது தமிழ்மாகாணத்தை அடுத்துள்ளது கேரளமாகாணம். மலையாளநாடு எனப்படுவதே கேரளநாடாகும். எங்கும் பரந்துநிற்கும் அருள்வடிவினுடைய ஆண்டவனை, சகுண வழிபாட்டின் வாயிலாக எளிதில் வழிபட்டு ஆன்மாக்கள் உய்யுமாறு ஆன்றோர் அமைத்துச் சென்ற அலயங்கட்கு நமது தென்னிந்தியாவே பெயர் பெற்றதென்பது எவரும் அறிந்ததொன்று. அன்புநெறி வளர்ந்தோங்க ஆண்டவன் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள ஆலயங்கள் பற்பல நமது தமிழ்நாட்டிலிருப்பினும், அவற்றுள் அன்புமிகுந்து அகங்கசிந்துருகி அழுதும் தொழுதும் ஆடியும் பாடியும் இறைவனருள் இன்னருள் பெற்ற ஆழ்வார்கள் பதின்மராலும், சமயகுரவர் நால்வராலும் பாடப்பெற்ற திருக்கோயில்களே பெரிதும் சிறப்புடையன என்று கருதப்படுகின்றன. அவற்றுள், மலையாள நாட்டிலிருப்பன பதின்மூன்றாகும்.

சமீபத்தில், திவ்யதேசயாத்திரையாகச் சென்றிருந்த சிறியேற்கு, அப்பதின்மூன்றனுள் ஒன்பது திருப்பதிகளைத் தரிசிக்கும் பேறு வாய்த்தது. நமது தமிழ்நாட்டிலுள்ள வைணவக்கோயில்களுள், ஐயங்கார்களால் வைகானஸம்" "பாஞ்சராத்ரம்" எனும் ஆகமங்களிரண்டனுள் ஏதேனுமொன்றைப் பின்பற்றிய திருவாராதனைகள் நடைபெறுவதுபோல, மலையாளத்திற் கிடையாது. அக்கோயில்கள் பதின்மூன்றும் போத்திமார் எனும் அந்நாட்டுப்பார்ப்பனராலேயே பூசிக்கப்படுகின்றன. பொதுவாகக் கூறுமிடத்து, அப்போத்திமாரின் தெய்வபக்தியும் சீலமும் போற்றற்குரியனவே. பிரதிதினமும், அதிகாலை நான்குமணிக்கே கோயில்கள் திறக்கப்பட்டு மூர்த்திகட்கு தீபாராதனை நடைபெறுவதைக்காண எவரும் வியவாமலிரார். மூர்த்திகளைத் தொட்டுப் பூசிக்கும் பட்டர்கள் காலையிலும் மாலையிலும் ஸ்நானம் செய்த பின்னரே ஆலயத்துட்செல்வது மிக நன்றே. இன்னோரன்ன மகிழ்ந்து போற்றற்குரிய விஷயங்கள் சில இருப்பினும், பெரிதும் வருந்தத்தக்கனவும் கண்டிக்கத்தக்கனவும் பல உள. அந்நாட்டு ஆலயங்களின் மாண்புக்கு அவ்வாறிருத்தல் பெருங்குறையே என்பதும், அந்நாட்டாரின் நற்பெயருக்கு அவை பெருங்கறையே செய்வன என்பதும் பெரிதும் கவனிக்கப் படுதல் வேண்டும்.

"பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்; சிறப்பொவ்வா—செய்தொழில் வேற்றுமையான"—என்று நாயனர் நல்லறிவுச்சுடர்கொளுத்தியவாறு ஆறறிவுடைய மக்களினத்தில் உயர்வுதாழ்வு கருதப்பட்டது, அவரவர் செயல்களின் ஏற்றத்தாழ்வுகளை ஒட்டியேயன்றி, கேவலம் சடஉடற்பிறப்பை ஒட்டியன்று. பண்டைநாளில், செந்தமிழன்னை எத்தகைய பிணிகட்கும் ஆளாகாது, ஏனையோர் வியந்துபோற்ற அரியணையில் அமர்ந்து ஆண்டுவந்தகாலத்தில்—மூவேந்தர்களால் செந்தமிழ்ச் செல்வி வளர்க்கப்பட்டு வந்தகாலம் வரை, கேரளம் உட்பட்ட தென்னிந்தியாவிலே சாதிப்பேய் தலைவிரித்தாடியதில்லை. சாதி எனும் சொல்லே தமிழ்ச் சொல்லன்று. எந்நாள்வரை சாதிப்பேய் நமது நன்னாட்டில் தலைகாட்டாதிருந்ததோ, அந்நாள்வரை, அழுக்காறு,

புறங்கூறல், ஆணவம், பகைமை, நாத்திகம் முதலிய தீயகுணங்களும் நாட்டாரிடையே பரவாநிருந்தன. தமிழ்நாடு செந்தமிழ் வேந்தர்களது செங்கோலாட்சியை இழந்து பிறர் வயப்பட்டபின்னர் காட்டுத்தீயேபோல் பரவிவரும் தீநீர்மைகளைச் சொல்லவும் வேண்டுமோ?

மலைநாட்டுத்திருப்பதிகள் பதின்மூன்றனுள் தலைமைபெற்று விளங்குவது திருவனந்தபுரமே. அந்நகரே அந்நாட்டின் தலைநகரமுமாம். அந்நகரில் அரசர் பெருமானது கோட்டைக்குள் அனந்த பத்மநாபஸ்வாமியின் ஆலயம் அழகு பெற அமைந்துள்ளது. சாதி மதங் கடந்தொளிரும் சச்சிதானந்தப் பரம் பொருளாய அப்பெருமானது ஆலயத்தில் நடைபெறுவனவற்றை அறிய எவரும் வருந்துவரெனில், மெய்யன்பினர் பெரிதும் வருந்துவரென்பதைச் சொல்லவும் வேண்டுமோ? பார்ப்பனர் தவிர்த்த ஏனைய எச்சாதியினரும் காலையில் ஒருமணி நேரமும், மாலையில் ஒருமணி நேரமுமே பெருமாளைச் சேவிக்க விடப்படுகின்றனர். ஏனைய எச்சமயத்திலும் சந்நிதிக்குட்செல்ல அவர்கட்கு உரிமைகிடையாதாம். பார்ப்பனர்மட்டும் எவ்வேளையிலும் எத்தடையுமின்றி தாராளமாக உட்செல்லலாமாம். அவ்வாறு வாயிற்காவற்காரன் கூறியது கேட்டபின் எனது நெஞ்சு பெரிதும் வருந்தியது. "அந்தோ! பெருமாளின் சேவைக்குத் தடையாயிருப்பது, யான் சூத்திரனாகப் பிறந்த தொன்றேயோ!"-என எண்ணிப் பெரிதும் சிந்தை நொந்தேன். அம்மட்டோ! பார்ப்பனரைத் தவிர்த்த ஏனைய எவர்க்கும் தீர்த்தம் சாதிப்பதில்லை; கையிற் பிரசாதம் தருவதுமில்லை. சூத்திரர் கரதலில் தீர்த்தத்தை வார்த்தால், போத்திமார் தமது தூய்மையை இழந்து விடுவராம்; தவறி வார்த்து விட்டாலோ, நீராடியபின்பே ஆராதனைக்குத் தொடங்கலாமாம். எச்சாத்திரத்தில், எம்மகாத்மாவால் அவ்வாறு விதிக்கப்பட்டிருக்கிறதோ அறியேன். திருத்துழாய், சந்தனம், பிரசாதங்கள் முதலியவற்றை நாய்க்கு எறிவதுபோல்-தூரத்தேநின்று பலர்நடக்கும் இடத்திலே எறிகின்றனர்; அவற்றை ஆலயத்திற்குப் போகுமன்பர்கள் பொறுக்கிக்கொள்ளவேண்டும். அந்தோ! என்ன கொடுமை இது! இருகரங்களாலும் ஆர்வத்தோடு வாங்கி இருகண்களிலும் ஒற்றிக்கொண்டு, இறைவனை ஏத்தித் தோத்திரஞ் செய்தற்கின்றி மானிடர் காலடிகள்படும் தரையில் எறியப்பட்டவற்றை எடுத்துக்கொண்டு, 'பகவத் ப்ரஸாத' மாகக் கொள்ளவேண்டுமென்றால், ஆண்டவனது திருவருளைப் பெற்றுய்ய ஆலயத்தைநாடிவந்த மெய்யன்பர்களது உள்ளம் எவ்வளவு கொதிப்படையக்கூடும்! 'பகவத்ப்ரஸாத'த்தினிடம் அப்போத்திமார் வைத்துள்ள மதிப்பை நினைந்து அழுவதா? சிரிப்பதா?

மலையாள நாட்டுக் கோயில்களில், பெருமான் எழுந்தருளியிருக்கும் விமானத்தின் முன் 'ஒற்றைக்கல் மண்டபம்' என்று ஒன்று உண்டு. திருவனந்தபுரத்திலுள்ள அம்மண்டபத்தின் மீது எட்டுறுப்பும் நிலத்திற்பட எவரும் வீழ்ந்து வணங்குதல் கூடாதாம்; ஏனைய பன்னிரு திவ்யதேசங்களுள், அம்மண்டபத்திலேறி பார்ப்பனர் மட்டும் ஸேவிக்கலாமாயினும், ஏனைய எவ்வருணத்தவர்க்கும் அவ்வுரிமை கிடையாதாம். அம்மண்டபத்திலேறவுங்கூட பார்ப்பனரல்லாத பத்தர்கட்கு உரிமையில்லை யென்றால், மலையாள நாட்டுக் கோயில்களில் சூத்திரர்கள் எவ்வாறு நடத்தப்படுகின்றார்க ளென்பதை வாசகர்கள் ஊகித்து உணர்ந்து கொள்ளலாம். திருவல்லவாழ் எனும் திவ்யதேசமொன்றில், பெருமாளைச் சேவிக்கப் பெண்மணிகள் உள்ளே விடப்படுவதில்லை. இவ்விநோதத்தடை இந்தியாவில் வேறு எக்கோயிலிலும் கிடையாது. அதிலும், ஆடவரைவிட பெண்மணிகளே பெரிதும் மதிக்கப்படும் மலையாள

காட்டிலுள்ள அக்கோயிலிலேயே அத்தடை இருந்து வருவது பெருவியப்பிற் கிடமாகும்.

மேற்கண்ட அவமானங்களனைத்தையும் பெருமான் ஸேவையின் பொருட்டு ஆழ்வார் மங்களாசாசனப் பாசுரங்களின் அருமையுணர்ந்த அன்பர்கள் ஒருவாறு சகித்துக்கொண்டாலும், மற்றொரு பெருந்தடையை அறியப் பெரிதும் துன்புறுவர். திருவனந்தபுரத்திலே, ஆலயத்தின் நான்கு வாசல்களிலும் எவ்வேளையிலும் காவற்காரர்கள் இருப்பர். பார்ப்பனரல்லாத பக்தர், எவர் சென்றாலும் அவரை மறித்து அக்காவற்காரர் கேட்கும் முதற்கேள்வி நீ 'எச்சாதியைச் சார்ந்தவன்?'-என்பதே. தாஸநம்பிகள் எனப்படும் சாத்தாதவைணவர்கள், 'நாயுடு' குலத்தினர், 'வெள்ளாழர்' என அவர்கள் வழங்கும் வேளாளர்கள்,-ஆகிய மூன்று வகுப்பினரைத் தவிர்த்து-யாதவர்கள், தனவைசியர்கள், செட்டிமார், முதலிமார் முதலிய எத்தகையோரும் ஆலயத்திற்குள் விடப்படுவதில்லை. என்ன கொடுமையிது! ஐந்தாங்குலத்தினராய ஒதுக்கப்பட்டோரும் கோயில்களில் சேவைக்கு விடப்படுசல் வேண்டுமென்று கிளர்ச்சி நடை பெற்றுவரும் இக்காலத்தில் ஆழ்வாரால் போற்றப்பட்டு உலகெலாம் போற்றும் உயர்பெரு நூலாம் கீதையை அருளிய கண்ணபிரான் திருவவதரிக்கப் பெற்றதும், ஔவைப் பிராட்டியாராலும் பண்டைத் தமிழர்களாலும் முல்லைநிலமக்கள் என்று கொண்டாடப்பட்ட சூதுவாதறியாத மக்களை உடையதும், எண்பத்து நான்கு இமையோரை தனனிடங்கொண்ட லோகமாதவையே தங்கள் செல்வமாகக்கொண்ட மக்களை யுடையதுமான யாதவர்குலமும், அறஞ்செய்வதிற் பெயர்பெற்ற நகரத்தார் மரபும் மலைநாட்டுப் போத்திமாரால் ஸ்வாமி தர்சனத்திற்குத் தகுதியற்ற சாதிகளாக எண்ணப் படுவதும் கலிகால விந்தைகளுள் ஒன்றேயாம். கேவலம் சாதிப்பிரிவுகள் கோவில் நுழைவிற்கும் ஸ்வாமி தர்சனத்திற்கும் தடைகளாகக் கருதப்படுவது, பண்டைக்காலத்தில் அவ்வாலயங்களை அமைத்துச்சென்ற ஆன்றோரின் சீரிய நோக்கத்தினையே குலைப்பதாகும். தென்னிந்தியக் கோயில்கள் தமிழ் மன்னர்களின் ஆட்சிக்குட்பட்டு எண்ணிறந்த மக்களை சமரச சன்மார்க்க நெறிபற்றி ஒழுகுவித்து உய்வித்து வந்த காலத்தில் சாதிபேதம் பாராட்டப் பட்டதில்லை என்பதற்கு திருப்பாணாழ்வார் வரலாறும், திருநாளைப் போவார் சரிதையுமே சான்றுவனவாம்.

"குலந்தாங்கு சாதிகள் நாலிலுங் கீழிழிந்து எத்தனை
நலந்தானிலாத சண்டாளர் சண்டாளர்களாகிலும்
வலந்தாங்கு சக்கரத்தண்ணல் மணிவண்ணற்காளென்று உன்
கலந்தா ரடியார் தம் மடியா ரடியோங்களே"—

என்ற சடகோபாழ்வார் அருள் மொழியொன்றே அக்கூற்றை வலியுறுத்தப் போதியதாகும். மலைமகள் மணாளனும் மகாதேவனை வழிபட்டு முத்திபெற்ற நாயன்மார் அறுபத்து மூவருள், பல திறப்பட்ட குலத்தினரும் கலந்திருந்தனரென்பது பெரிய புராணத்தில் தெளியக் கிடக்கின்றது. 'சாதி குலம் பிறப்பென்னும் சுழிபட்டுத் தடுமாறும்' பேதைமை தீர்ந்தாலன்றி, சாதி மதங்கடந்தோளிரும் சச்சிதானந்தப் பரம்பொருளின் கருணைக்காளாவது அரிதே.

மிகுந்த ஆசார சீலர்களாகத் தங்களைப் பாராட்டிக்கொள்ளும் மலையாள நாட்டு அந்தணர்கள்-இல்லை-அச் செம்மொழியால் அழைக்கத் தகாத பார்ப்பனர்கள் அனந்த பதமநாபஸ்வாமியின் ஆலயத்தின் பிரகாரம் முழுவதும்,

ஊட்டுப்பிறை என்ற பெயரால் ஆயிரக் கணக்கான பார்ப்பனர்கட்கு அனைவரும் பார்க்க அன்னம் படைத்த பின்னர், சாணங்கொண்டு உண்ட இடங்களைச் சுத்தமும் செய்யாது பிரகாரமெங்கும் சோற்றுப் பருக்கைகள் சிதறிக் கிடக்கவும் விட்டுவிடுகின்றனர்; சூத்திரதேசாந்தரி ஒருவருக்கேனும் சோறு போடுவதில்லை என்பதைச் சொல்ல வேண்டுவதில்லை; அருவருக்கத்தக்க அச்செயல் எவ்வளவு பகவதபசாரமும் அனாசாரமு மாகுமென்பதைச் சொல்லவும் வேண்டுமோ? நகரத்தில் வேலைசெய்து பணமும் சேகரித்துக்கொண்டு, கோயிலில் இலவசமாக உண்டு, பணத்தை மிகுத்துவோரும் பலர் உண்டாம். பெருமாள் அன்னத்தை உண்போருள், எத்துணைப்பேர் பெருமாளைச் சேவித்துச் செல்வோரென்று எண்ணப்புகுவோமாயின், அவர்களது பேதைமை பெருநகைப்பிற்கிடமாகும். மற்றும் திருக்கோயில்களில் பிரதக்ஷிணம்செய்யுங் காலத்து, குடைபிடித்துக்கொண்டு நடந்துசெல்லும் அந்நாட்டு வழக்கத்தைக் காண வெரும் பரிகசியாதிரார்; குடைபிடித்துக்கொண்டு வலம் வருவதும் பக்திமார்க்கத்திற் சேர்ந்ததாகுமோ? உச்சிக்காலத்தில், மந்த்ர பூர்வமாக போத்திமாரால் பலிபீடத்தின்மீது இடப்படும் திருத்துழாய் முதலிய புனிதப்பொருள்களை, கோயில் வேலைக்காரர்கள் விளக்குமாற்றால் அப்புறப்படுத்துகின்றனர்; இம்மஹாபசாரத்தைக்காண எவ்வன்பர் உள்ளமும் பெரிதும் துன்புறும்; விரிக்கிற்பெருகும்.

அன்பர்காள்! இவ்வளவுதூரம் கூறிவந்தனவெல்லாம் பிராமணத் துவேஷத்தாலேனும் மலையாள நாட்டினரை இழித்துரைக்க வேண்டுமென்னும் எண்ணத்தாலேனும், அறநெறிக்குப் புறம்பான பிற எத்தகைய நோக்கங் கொண்டேனும் அல்லவே அல்ல. பல இடையூறுகளைக் கடந்து, பல அவமானங்களையும் பொறுத்து உள்ள உறுதியுடன் மலைநாட்டிற்குச் சென்று வந்த சிறியேன், உள்ளத்தை உருக்கி உண்மை உணர்வை யூட்டி, ஆண்டவனிடம் மெய்யன்பு செலுத்தத் தூண்டும் தேனினுமினிய தீஞ்சுவை வாய்ந்த திருவாய் மொழியில் ஈடுபட்டு, "படமுடையரவிற் பள்ளிபயின்றவன் பாதங் காண—நடமினோ நமர்களுள்ளீர்! நாமுமக்கறியச் சொன்னோம்"—என்று ஆழ்வார் பணித்தவாறு அனந்த பத்மநாபஸ்வாமியை ஸேவிக்கச் செல்லும் மெய்யன்பர்கட்கு ஏற்படும் தொல்லைகள் தொலைய வேண்டுமென்ற நன்னோக்கத்துடனே இக்கட்டுரை வரையலானேன். மலைநாட்டிற் சென்று குடியேறியுள்ள தமிழ்மக்களேனும்—நமது தமிழ்நாட்டிலுள்ள தேசாபிமானிகளேனும் நற்பெயர் பெற்றுவிளங்கும் திருவிதாங்கூர் அரசாங்கமேனும் முன்வந்து, பெரிதும் முயன்று மேற்கண்ட குறைபாடுகளைக் களைவராயின் மலைநாட்டுக் கோயில்கள் மாசுநீங்கித் தேசுபெற்றுத் திகழ்வதோடு, அனந்த பத்மநாபனது திருவுள்ளமும் குளிருமென்று விண்ணப்பித்துக் கொள்ளுகின்றேன். அச்சீரிய பணியே விசிஷ்டாத்வைத ஸித்தாந்த ஸ்தாபகரான இராமாநுஜரின் அனுக்ரஹத்தையும் பெறுவிப்பதாகும்.

---

## புதிய ஜீவிய சந்தாதார்.

F. 591. மலாக்காவைச் சேர்ந்த டாங்காக் திருவாளர் S. கோவிந்தசாமி அவர்கள் நமது "ஆனந்தபோதினி" மாதப்பத்திரிகைக்கு ஜீவிய சந்தாதாரராகச் சேர்ந்திருக்கிறார்கள். அவர்கள் சகல பாக்கியமும் பெற்று பல்லாண்டு வாழுமாறு எல்லாம் வல்ல திருவருளை வழுத்துகின்றோம். ப-ர்.






## வேதாந்த சார சங்கிரக வசனம்.

(186-ம் பக்கத் தொடர்ச்சி.)

(தமிழ்ப்பண்டிதர். பூ. ஸ்ரீநிவாசன்)

**சீடன்:**—குருநாதா! அத்தியாசம் அஞ்ஞானத்தா லுண்டாயிற்றெனக் கூறினீர்கள். அஞ்ஞானத்தால் எப்பொழுது உண்டாயிற்றோ அப்பொழுதே அது அசத்தியமானதாகுமென்று ஒப்பித்தீரவேண்டும். அசத்துரூபமான அத்தியாசம் ஒரு காரியத்தை யுண்டாக்காது. அங்ஙனமாக, அதனால் பிரபஞ்ச வியாபாரம் எங்ஙன முண்டாம்?

**குரு:**—ஞானகுமாரா! கயிற்றில் பிராந்தியால் காணப்பட்ட பாம்பானது பயம் நடுக்கம் முதலியவற்றை உண்டாக்குவதுபோல அசத்துவடிவ அத்தியாசமும் ஆன்மாவிற்குப் பிரபஞ்ச வியாபாரத்தை யுண்டாக்கிற்றென்றறிவாயாக. இனி,

பரமாத்மாவிற்கும் ஜீவனுக்கும் உபாதி சமானமாகவே யிருக்கையில், பரமாத்மாவிற்கு மாத்திரம் சிருஷ்டித்துவம் முதலியவை உண்டா யிருப்பதேன் எனக் கேட்டனை யன்றோ? அதற்குச் சமாதானம் கூறுகிறேன், கேள்.

பரமாத்மாவுக்கும் ஜீவனுக் கிருப்பதுபோல உபாதி சமானமா யிருப்பினும், அவ்விரண்டு உபாதிகளுக்கும் பேத மிருத்தலால், ஜீவனுக்கு இருப்பதுபோல பரமாத்மாவிற்கு பந்தமும் அதன் காரியங்களும் இல்லை. ஈசுவரனுக்கு சுத்த சத்துவப் பிரதானமான மாயை உபாதியாம். அது காரண சரீர சமஷ்டி வடிவினதாம். அதனால் அதனிடத்தில் அற்பத்தன்மையில்லை. அதனால், அது சத்துவகுணப் பிரதானமானதாம். அதனால், தமோசக்தியாகிய ஆவரணமும் ரஜோ சக்தியாகிய பிரபஞ்ச கற்பனைவடிவ விட்சேபமும் அணுவளவும் அதனிடத்தில்லை. அதனால், ஈசுவரன் பேரறிவுடையவனும் சர்வசக்தனும் சுவதந்திரனும் இருப்பதுமன்றி, சத்துவ குணத்தினின்றுஞ் சிறிதும் மாறாமல், தன் சக்தியினால் ரஜஸ் தமஸ்களை நீக்கி, சங்கற்ப மாத்திரத்தால் சிருஷ்டி திதி சங்காரம் திரோபவம் அனுக்கிரகம் என்னும் ஐந்து தொழில்களையும் இயற்றுகின்றனன்.

ஆத்மா ராஜஸ தாமஸங்களைப் பிரவிர்த்திக்கவும் நிவிர்த்திக்கவும் சக்தியுடையவனா யிருக்கின்றமையின் அந்த ராசத தாமதங்களின் காரியமாகிய ஆவரண விட்சேபங்கள் ஆத்மாவை ஒன்றும் செய்யச் சக்தியற்றவையாம்.

**சீடன்:**—ஆவரண விட்சேபங்கள் ஜீவனுக்கு எங்ஙனம் உண்டாயின?

**குரு:**—சீவனுடைய உபாதியாகிய அவித்தையில் சத்துவம் மிகச் சொற்பம், ராசத தாமத குணங்கள் மிகுதியாயுள்ளன. அதனால் அவற்றின் காரியங்களாகிய ஆவரண விட்சேபங்கள் சீவனிடத்து மிகுதியாயிருக்கின்றன. இவ்வாறு சத்துவகுணம் மிகக் குறைவாயும் ராசத தாமத குணங்கள் அதிகமாயும் இருப்பதனால்தான் சீவனுக்கு பந்தமும், அப்பந்தத்தால் சம்சாரமும் உண்டாயின.

ஆகவே, சீவனுக்கு சம்சார முண்டாவதற்குக் காரணம் அத்தியாசமே. அத்தியாசமென்றால், ஒரு வஸ்துவை வேறொரு வஸ்துவாகக் கருதுதல்,

இந்த அத்தியாசத்திற்குக் காரணமாயிருப்பதெது? அஞ்ஞானமே. அந்த அஞ்ஞானம் எத்தகையதெனின், வஸ்துவின் சொரூபத்தை மறைப்பதே அதன் லட்சணமாம்.

## அஞ்ஞான நிவிர்த்தி.

சீடன்:—அந்த அஞ்ஞானத்தை நிவிர்த்தி செய்வதெப்படி?

குரு:—அஞ்ஞானத்திற்கு ஞானத்தினாலேயே நிவிர்த்தி யுண்டாகுமேயன்றி, கர்மத்தினால் உண்டாகாது. கர்மம் விரோதியாவதில்லை யாகலின், அஞ்ஞானத்தைப் பாதிக்காது. பிராணனானவன் கர்மத்தினால் பிறக்கிறான்; கர்மத்தினால் இறக்கிறான். ஆகையால் ஜனன மரணங்கள் கர்மத்தின் காரியமேயாகும். கர்மத்திற்கு இந்த ஜனன மரணங்களை யுண்டாக்குவதைக் காட்டிலும் விசேஷமான காரியம் வேறில்லை. இந்தக் கர்மம் அஞ்ஞானத்தினால் விருத்தியடைகின்றமையின் இது அஞ்ஞானத்தின் காரியமேயாகும். எது எதனால் விருத்தி யடைகின்றதோ, அதனால் அதற்கு நாசமுண்டாவதில்லை. எந்த வஸ்துவிற்கு எந்த வஸ்துவோடு சேர்க்கை யுண்டாகின்றதோ அந்த வஸ்து அந்த வஸ்துவை யழிப்பதற்குச் சாமர்த்திய முடையதாகாது. அஞ்ஞானத்தால் கர்மம் விருத்தியடைவதாயும், அஞ்ஞானம் கர்மத்தோடு கூடியிருப்பதாயு மிருத்தலால், அவ்வஞ்ஞானம் கர்மத்தால் நசிப்பதில்லை.

எல்லாவிதமான கர்மங்களும் எப்பொழுதும் எல்லாவிதங்களாலும் அஞ்ஞானத்திற்கு விரோதியாவதில்லை. ஆதலால், அஞ்ஞானத்தின் நாசம் கர்மத்தால் சித்தியாது. எந்த வஸ்துவிற்கு, அப்பொழுதே நாசத்தை யுண்டாக்கும் எந்த வஸ்துவினுடைய சம்போகம் (சேர்க்கை) உண்டோ, வேறுபட்ட சுபாவத்தையுடைய அந்த இரண்டு வஸ்துக்களுக்கே விரோதம் யுக்தமாம். எப்படி இருட்டிற்கும் வெளிச்சத்திற்கும் அன்னியோன்னிய விரோதமுண்டோ அப்படியே ஞானாஞ்ஞானங்களிரண்டிற்கும் அன்னியோன்னிய விரோதமுண்டு. ஆகையால், ஞானத்தாலன்றி வேறெவ்வகையாலும் அஞ்ஞானத்தின் நீக்கம் உண்டாகாது ஆகவே, அஞ்ஞான நிவர்த்தியின் பொருட்டு ஒவ்வொருவரும் அத்தியாவசியமாக ஞானத்தைச் சம்பாதித்தல் வேண்டும்.

சீடன்:—ஞானம் எதனால் உண்டாகும்?

குரு:—ஞானம் ஆத்மானாத்ம விவேகத்தாலுண்டாகின்றது. வேறொன்றால் உண்டாவதில்லை. ஆகையால், 'ஆத்மா இது, அனாத்மா இது' என்று யுக்தியால் வேறு பிரித்தறிதல் வேண்டும்.

ஆத்மாவல்லாத தேகேந்திரியாதிகளினிடத்தில் ஆத்மபாவமுண்டாகின்றது. அதுவே பந்தம்; இது எவ்வாறு நீங்குமெனின், ஆத்மானாத்ம விவேகத்தால் நீங்கும். ஆகையால், அந்த ஆத்மானாத்ம விவேகம் நன்கு விளங்கும் பொருட்டு ஓர் விவாதத்தின் மூலமாக அதை நிரூபிக்கிறேன். இவ் விவாதத்தால் 'இது ஆத்மா, இது அனாத்மா' வென்பது நன்கு விளங்கும் ஆகையால், அன்பனே! சித்தத்தைச் சிதையாமல் நிறுத்திக் கேள்.

இவ்விவாதம் எத்தகையோர்க்குள் உண்டாயிற்றெனின், வேதாந்த சிரவணம் செய்யாதவர்களும், தாமே சிறந்த பண்டிதர்களெனத் தங்களைத் தாங்களே பெருமைப்படுத்திக்கொள்ளுகிறவர்களும், ஈசுவரானுக்கிரக மில்லாதவர்களும், சற்குரு கடாட்சம் பெறாதவர்களும, பாகிய திருஷ்டியுடையவர்களுமாயிருக்கும மூடர்களுக்குள் உண்டாயிற்று. அதனை ஆதாரத்தோடு கூறுகிறேன் கேட்பாயாக.

## புத்திராத்ம வாதம்.

கேவலம் மூடனாகிய ஒருவன் தன்னிடத்தில் தனக்கு மிகுந்த பிரியமிருப்பதுபோலத் தன் புத்திரனிடத்திலும் மிகுந்த பிரியம் தனக்குண்டாயிருப்பதாலும், புத்திரன்சுகமாயிருந்தால் நான் சுகமாயிருக்கிறேனென்றும், புத்திரன் அசௌக்கியமா யிருந்தால் நான் அசௌக்கியமா யிருக்கிறேன் என்றும் எண்ணந் தோன்றுவது அனுபவமா யிருத்தலாலும், 'ஆத்மாவே புத்திரன்' என்னும் சுருதிவாக்கிய மிருப்பதாலும் 'புத்திரனே ஆத்மா' என்று எண்ணுகிறான். ஒரு விளக்கிலிருந்து எப்படி மற்றொரு விளக்கு உண்டாகின்றதோ அப்படியே தந்தையினிடத்தி லிருந்து புத்திரன் பிறக்கிறான். தந்தையின் குணங்கள் விதை முளை திருஷ்டாந்தப்படி (பீஜாங்குர நியாயமாக — விதையைப்போ லிருக்கும் முளை என்பதுபோல) புத்திரனிடத்துக் காணப்படுவதால் புத்திரனே ஆத்மா என்றிவ்வாறு கருதுகிறான்.

## தேகாத்ம வாதம்.

மற்றொருவன் 'புத்திரன் எப்படி ஆத்மாவாவான்?' என்ற புத்திராத்ம வாதி மதத்தைக் கண்டிக்கிறான்.

புத்திரனிடத்தில் மிகுந்த பிரியமிருப்பதால் மாத்திரம் புத்திரன் எப்படி ஆத்மாவாவான்? புத்திரனுக்கு அன்னியமாயுள்ள மண் பொன் முதலானவற்றினிடத்தும் பிரியம் காணப்படுகின்றது. (அவைகளெல்லாம் என் ஆத்மாவாகவில்லை. அப்படியே புத்திரனும ஆத்மாவாகான்.)

பிராணிகளுக்கு இத்தேகத்தினிடத்தில் புத்திரனைக் காட்டிலும் அதிகமான அன்பு இருக்கின்றது. தன் வீடு தீப்பற்றிக்கொண்டபோது தன்புத்திரனையும் விட்டுவிட்டு ஓடுகிறான். தன் தேகப் பாதுகாப்பினிமித்தம் புத்திரனையும் விற்றுவிடுகிறான். புத்திரன் தனக்குப் பிரதிகூலனா யிருப்பின் அவனைக் கொன்றுவிடுகிறான். ஆகையால் புத்திரன் எப்பொழுதும் ஆத்மாவாகான். விளக்கு திருஷ்டாந்தம் சரியல்ல. ஏனெனில் விளக்கிற்கிருப்பதுபோல, புத்திரனிடத்துத் தந்தையின் குணரூபாதிகளின் சமத்தோற்றமில்லை. எல்லா அவயவங்களும் நன்கு அமையப்பெற்றவனுக்கு அங்கவீன முள்ளவனும், சற்குண முள்ளவனிடத்திலிருந்து துர்க்குண முள்ளவனும் பிறக்கிறான். ஆகையால் புத்திராத்ம வாதியின் யுக்திகள் ஆபாசமேயாம்.

புத்திரனே ஆத்மாவென்ற சுருதியின் அபிப்பிராயம் இதுவாம். வீடு முதலிய எல்லாப் பொருள்களிடத்தும் எல்லாக் காரியங்களினிடத்தும் தந்தைக் கிருப்பதுபோல, எல்லாச் சுவதந்திரமும் புத்திரனுக்கும் உண்டு. இதைப்பற்றியே சுருதியானது உபசாரமாக புத்திரன் ஆத்மாவெனக் கூறியதேயன்றி முக்கியமாகக் கூறவில்லை. 'நான்' என்னும் பதத்தால் அறியப்படுவது எது? தேகம்; ஆதலால் தேகமே ஆத்மாவாகும். தேகமே நான் என்னும் நிச்சயம் எல்லாப் பிராணிகளுக்கும் பிரத்தியக்ஷமாயிருக்கின்றது. 'இப்புருஷன் அன்னரசரூபமா யுள்ளவன்' என்று சுருதியும் தேகத்திற்கே புருஷத்துவம் கூறுகின்றது. புருஷன் எனின் ஆத்மாவேயன்றோ? ஆகையால் இத்தேகமே ஆத்மாவாம். (இது சார்வாகர் மதம்.)

## இந்திரியாத்ம வாதம்.

இந்த வாதத்தைக் கேட்டுச் சகிக்க முடியாதவனாய் வேறொரு மூடன் 'சுவதந்தர மற்றதாயும் சடமாயுமுள்ள தேகம் எப்படி ஆத்மாவாகும்?' என்று தேகாத்மா வாதியைக் கண்டிக்கிறான்.

கிருகஸ்தனுக்குக் கிருகம் இருப்பிடமா யிருத்தல்போல கண் முதலிய இந்திரியங்களுக்கு இத்தேகம் இருப்பிடமா யிருக்கின்றது. அன்றியும், இது, சுக்கில சோணிதங்களால் பிறந்து, பால்யம் முதலாகிய அனேக அவஸ்தைகளை யுடையதாய், இந்திரியங்கள் அசைப்பதால அசைவதா யிருப்பதே யன்றி சுவயேச்சையாகச் சிறிதும் அசையாததாயிருப்பது ஆதலால் சுவதந்திரமில்லாத இத்தேகம் எவ்வாறு ஆத்மாவாகும்? ஆகாது.

தவிர, நான் செவிடன்; நான் குருடன்; நான் ஊமை என்னும் அநுபவத்தால் அந்த இந்திரியங்களுக்கு பதார்த்த ஞானம் இருக்கிறதோ அந்த இந்திரியங்கள் ஆத்மாவாம்.

'இந்திரியங்களும் பிராணனும் விவாதப்பட்டுக்கொண்டு பிரஹ்ம தேவனிடம் சென்று தங்கள் விவாதத்தைக் கூறின' எனக் கூறுவதன் மூலமாக சுருதியானது இந்திரியங்கள் அசேதனமன்று சேதனமாம் என்பதை நிரூபிக்கின்றது. ஆகையால், இந்திரியங்களே ஆத்மாவாம். (இது சார்வாகரில் ஒரு சாரார் மதம்.)

# கால வைரவன்.

(பண்டிதர். L. இராமசாமி நாயுடு.)

குமாரலிங்கம் பிர்க்கா ரெவின்யூ இன்ஸ்பெக்டர் வெங்கோபராயர் மாத்துவப் பிராமணர். சுமார் நாற்பத்தைந்து வயதிருக்கும். பென்ஷன் வாங்கப் போகிற வழிக்கு வந்துவிட்டார். ரெவின்யூ இன்ஸ்பெக்டர் உத்தியோகம் கொஞ்சம் இராக்கி உள்ளது. யதா லாபத்திலேயே காலந்தள்ளி வருகிற சம்பளத்தை அப்படி யப்படியே மூட்டைகட்டிப் பெட்டியில் எறியத்தக்க உத்தியோகங்களுள் இது முதன்மை பெற்றதென்பது வெகு ஜனங்களுக்கு என்றாலும் நமது வெங்கோப ராயர் விஷயம் வேறு; நியாய வழியிலே தெய்வமுகம் பார்த்துக் காலக்ஷேபம் செய்யவேண்டியவரே யொழிய ஒரு விரகுக்குச்சி கூட அந்நியரை வாய்திறந்து கேட்கவேண்டிய மனுஷரல்லர். இதற்குப் பொருத்தமாக குடும்பமும் சிறிது. பத்துப்பேர் எட்டுப்பேரில்லை. ஏக புத்திரி துளசிபாய் ஒருத்திதான் வீட்டில். பன்னிரண்டு வருஷங்களுக்குப் பிறகு இந்தப் பெண்ணைப் பெற்று விட்டுவிட்டு வெங்கோபராயர் மனைவி காலஞ்சென்றாள். பன்னிரண்டு வயதான துளசிபாய் தான் நமது ராயரவர்களுக்கு உயிர். ராயர் ஸ்தூல சரீரம் படைத்தவர். இதோடு படு கோபம்; துருவாசர் அவதாரமோ என்று நினைக்கவேண்டி யிருக்கும். இவருடைய பெற்றோர்கள் தீர்க்க தரிசனம் வாய்ந்தவர்களா யிருக்கவேண்டும். முன்னாடியே குணங் கண்டன்றோ பெயரமைத்திருக்கின்றனர்! இந்தப் பிரபஞ்சத்தில் இவருடைய கண்ணுக்குத் தென்பட்ட ஒவ்வொரு மனிதனும்—ஏன்? ஜந்துவுங்கூட ஏதோ ஒரு சமயமாவது அவருக்குக் கோபமூட்டியே இருக்க வேண்டும். அந்தக் கிராமத்தில் எல்லாவற்றுள்ளும் அதிக கோபத்தை (பயத்தைக்கூட) உண்டாக்கியது ஒரு கருநாய். ஒரு நாள் நமது ரெவின்யூ இன்ஸ்பெக்டரவர்கள் மாலைக்கடன் கழிக்கக் குளத்தங்கரைப் பக்கம் சென்றுவிட்டு வரும்போது அந்த நாய் பின் தொடர்ந்து அந்த "டபிள் பனை" பிராமணரைக் குளத்தை மூன்றுசுற்று ஓடச்செய்தது மாத்திரமா?—வீட்டுக்குப்போய் ஒரு செம்பு நல்ல ஜலத்தையும் குடிக்கும்படிச் செய்துவிட்டது. இந்தச் சம்பவத்திலிருந்து தனியாக வெளியில் புறப்படுவதையே மறந்துவிட்டார். தடியுங் கையுமாக இரண்டு தலையாரிகள் துணைசெய்ய உஷாராக நின்றாலொழிய சாயங்கால வேளைகளில் இவரை இருந்த விடத்தைவிட்டு அசைத்து விட முடியாது. எங்காகிலும் நாய் பலமாகக் குரைத்துவிடக்கூடாது. குபீரென்று திகில் தோன்றி ஒடுங்கி மூலை சேர்ந்துவிடுவார் பாவம்!

---

அந்தவூர் கர்ணத்தின் பேர் கிருஷ்ணராவ். இவனும் மாத்துவப் பிராமணனே. வயது பத்தொன்பதாகிறது. ஆள் நல்ல சிவப்பு; வாட்டசாட்டம் பொருந்திய ஒல்லியான சரீரம். இவன் சாதாரணமாய் வெங்கோபராயர் வீட்டிலேயே இருந்து தாயில்லாத துளசிபாயிக்கும் வயது முதிர்ந்த வெங்கோபராயருக்கும் வீட்டுக்காரியங்களில் துணையாயிருப்பான். கிருஷ்ணராவுக்கும் வேறு யாருமில்லை; ஒரு தனிப்பட்ட ஏகாங்கி. ஆனால் ஒரேயடியாக ஏகாங்கி என்று தள்ளிவிடுவதற்கும் நியாயமில்லை. காரணம் என்னவென்று வாசகர்கள் கேட்கலாம். கிருஷ்ணராவுக்கு துளசிபாய்மீது கரைகடந்த காதல், அபிமானம், பிரேமை உண்டு.

ஒருநாள் சாயங்காலம் துளசிபாய் தனக்கும் தகப்பனுருக்கும் சமையல் செய்து வைத்துவிட்டுச் சாவகாசமாய் புழக்கடையிலுள்ள மல்லிகைப் புதருக்குப் பக்கத்தி லுட்கார்ந்துகொண்டு கிருஷ்ணுராவ் சொல்லுகிற கதைகளைச் சிரத்தையாகக் கேட்டுக்கொண் டிருந்தாள். "மஹேந்திரபுர ராஜாவுக்கு ஒரே ஒரு மகன். அவன் காட்டிற்கு வேட்டைக்குப் போனன்; அந்தக் கானகத்தில் ஒரு பெரிய மேடை; அந்த மேடைமீது ஒரு அழகான பன்னிரண்டு வயதுள்ள பெண்மணி'—என்று ஏதோ கதை சொல்லிக்கொண் டிருக்கும்போது துளசிபாய் உள்ளத்தில் அமிர்தமான நாணம் உதயமாகி, அந்த நாணம் அவளுடைய வைரக்கல் மூக்கைத் தாக்கிக் கண்ணுக்குள் பாய்ந்து மேலே பலவந்தமாய்ப் பொங்கி வழிந்தது; அந்த வேகத்தல் கண்ணிமைகள் சுருங்கச் சுருங்கி அசைதல், கண்களிற் சிவப்பு ஏற்றம், முகம் கீழே கவிழ்தல், பவள இதழ்களில் புன்முறுவல், நெஞ்சில் தடதட—இத்தனை லட்சணங்களை அந்த ஒருவார்த்தை உண்டாக்கி விட்டது! இவற்றை யெல்லாம் கூர்ந்து கவனித்துக களித்தான் கிருஷ்ணராவ். சிறு வயதிலிருந்தே துளசிபாயிடம் அடிக்கடி வந்து ஹாஸ்ய வார்த்தைகள் பேசிச் சிரிக்கச் செய்வதிலும் இவளோடு சரசமாடுவதிலும் நமது கிருஷ்ணராவுக்கு அளவற்ற உற்சாகம். துளசிபாய்க்கும் அவனுடைய வார்த்தைகளிலும் அவனைத் தரிசிப்பதிலும் ஒருதனி இன்பம் ஜனிப்பதுண்டு. இவர்களுக்குள் வெகு நாட்களாய் நடந்துவருகிற பரஸ்பர முத்த பரிவர்த்தனைத்தை நாம் வெளியிற் சொல்லுவது அநாவசியம். மேலே சொன்ன லட்சணங்களோடு துளசிபாய் வெட்கி இருக்கும்போது கூட முத்தங் கொடுக்கப்பட்டிருக்கும்.

*　　*　　*　　*　　*　　*

அன்றையதினம கார்த்திகை சோமவாரம். ரெவின்யூ இன்ஸ்பெக்டர் வெங்கோபராயர் பகல் முழுவதும் உபவாசமிருந்துவிட்டுச் சாயங்கால பூஜைக்குத் தேவாலயத்திற்குப் புறப்பட்டுப்போனுர். கருநாய் பயத்தால் தண்டேந்திய கையரான இருதலையாரிகள் பின் தொடர்ந்து போனுர்கள். கர்ணம் கிருஷ்ணராவை அன்றையதினம் தமது வீட்டிற்குப் போஜனத்திற்கு வருமாறு வெங்கோபராயர் அழைத்திருந்தார். நட்சத்திர தரிசனமில்லாமல் சிவாலயத்தைவிட்டு வீடு திரும்பமாட்டார் என்றவிஷயம் கிருஷ்ணராவுக்குத் தெரியுமாதலால் துளசிபாயிடம் தட்டுத் தடையின்றி சரச சல்லாப தமாஷ் ஜமாய்க்கலாமென்று ஜில்லென்ற உணர்ச்சி கிளம்பச் சீக்கிரமாகப் புறப்பட்டுவிட்டான். தகப்பனுர் திரும்பிவர இன்னும் ஒருமணி நேரமாகுமென்று துளசிபாயும் சாவகாசமாய்க் கவலையற்றுத் தீர்மானமாய் உட்கார்ந்திருந்தாள்.

காதல் காந்தம் போன்றது. ஒத்த அன்பினர் ஏகாந்தமா யிருந்தால் அவர்களுடைய குதூகலத்தை யாரால் வருணிக்க முடியும்? கிருஷ்ணராவும் துளசிபாயும் ஒருவருக்கொருவர் தம்மை மறந்து முத்தமிட்டுக் கொண்டு வழக்கப்படி நெருங்கி உட்கார்ந்து சம்பாஷிக்க ஆரம்பித்தனர். முதலில் துளசிபாய் மாமூல்படி கதை சொல்லுமாறு கிருஷ்ணராவைக் கேட்டாள். கிருஷ்ணராவுக்கு அது இஷ்டமில்லை. வீணகதை சொல்லி இந்த அரிய காலத்தைப் போக்கக்கூடாது என்று நினைத்து ஏதோ கேட்கத் தொடங்கினன். அதற்குள் துளசிபாய் "அதெல்லாம் சரி! ஒரு விஷயம் உன்னை நான் கேட்டுக் கொள்ளுகிறேன். நீ அதை என் மனதிறபடுபடி நன்ருகச் சொல்லவேண்டும். என்னிடம் சொல்லும் கதைகளில் காதல் காதல் என்று அடிக்கடி பிரயோகிக்கிருய்; இதுதான் ஸ்நேகத்திற்கு அஸ்திவாரம் என்றும் சொல்லுகிருய். எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை. அதன் அர்த்தத்தை

இப்போது சொல்லவேண்டும்" என்று மிகுந்த ஆவலோடு கேட்டான். "பேஷ்! நல்ல கேள்வி போட்டாய்! எனது குறிப்பறிந்து கேட்ட கேள்வியாகவன்றோ இருக்கிறது இது!" என்றான் கிருஷ்ணராவ். துளசிபாய் வேறு ஒன்றும் பேசாமல் புன்சிரிப்புடன் அதை விளக்கும்படி மறுபடியும் வற்புறுத்தினாள். "காதல் என்ற விஷயத்தை வருணிக்கக் கம்பனாவது காளிதாசனாவது தான் சரிவண்ணம்; எனக்கு அவ்வளவு பாண்டித்தியமுமில்லை



பழக்கமுமில்லை. ஆனால் நான் ஒரு உதாரணம் மாத்திரம் சொல்லி நிறுத்துகிறேன்' என்றான் கிருஷ்ணராவ். "அப்படியாவது சொல" என்றாள் துளசிபாய். "நீ இப்போது என்னிடம் மிகுந்த ஸ்நேகமாக இருக்கிறாய். உனது அப்பாவை வேறொரு ஊருக்கு மாற்றிவிட்டால நீயும் கூடவேபோய் அங்கேயே இருப்பாய் என்று வைத்துக் கொள்ளுவோம். அப்போது நீ என் கண்களிலேயே குடியிருப்பதுபோல் எனக்குத் தோன்றும்; உன்னை எப்பொழுது காண்பது என்ற ஆசை சதாகாலமும் என்னைப்பிடித்து ஆட்டிக் கொண்டே இருக்கும் நாம் இப்போது பேசிக் கொள்ளுவதும், முன்னர்ப் பேசிக் கொண்டதும், விளையாடினதும் எல்லாம் என்முன் வந்து நிற்கும். எப்படியாவது நீ இருக்கும் ஊருக்கு வந்து பார்த்தே தீருவது என்ற உறுதி எனக் கேற்பட்டுவிடும். அப்படியே நான் வந்துவிட்டேன்; உனது தரிசனமும் கிடைத்தது என்று வைத்துக்கொள். மறுபடியும் எனக் கென்ன தோன்றும் தெரியுமா? உனது இயற்கை அழகோடுகூடிய உருவம் என் பக்கத்தில் வரவேண்டும்; உனது கனிவாயிலிருந்து வரும் குயில் மொழி ஒன்றையாவது நான் கேட்டானந்திக்க வேண்டும் என்ற ஆசையெல்லாம் எனக்குத் தோன்றுமல்லவா? இம்மட்டோ? உனது கடைக்கண் நோக்கம் என்மீது பாயப்பெற்று நீ புன்முறுவல் செய்வதையும் நான் பார்த்துவிட்டால் இந்திர போகமும் இதற்கு ஈடில்லை என்றல்லவா நினைத்துவிடுவேன்? அப்போது என் உடம்பு பூரிக்கும்; அன்பின் பெருக்கால் முகத்தோடு முகம் வைத்து முத்தமிட்டுக் களிப்பேன். இன்னும் பல யோசனைகள் தோன்றும். ஆனால் உனது தந்தை பயம் கொஞ்சம் பின்வாங்கச் செய்யும். பின் வாங்கிய பின் இவற்றை எல்லாம் நினைத்தால் எனக்கு வெட்கமுண்டாகும் காதலைப் பற்றிய எனது தீர்மானம் இவ்வளவுதான். நமது காவியங்களும் காதல் என்பதை இப் பொருளில்தான் வழங்கும் என்பது எனதபிப்பிராயம். இதை நீ உண்மையென்று நம்பினால் இப்போது நான் உன்னைக் காதலிக்கிறேன் என்பதிற் சந்தேகமில்லை. என்ன சொல்லுகிறாய்? இனி உனக்கு என் மீதுள்ள காதலைப்பற்றிச் சொல் பார்க்கலாம்" என்றான் கிருஷ்ணராவ். இம் மொழிகளைக் கேட்டவுடன் துளசிபாய் நாணத்தால் விழுங்கப் பெற்றுத் தன்னை மறந்தாள். பின்னர் கிருஷ்ணராவின் முயற்சியால் பூமியைப் பார்த்தவண்ணம் சில வார்த்தைகள் பேசத் தொடங்கினாள். "உனக் கெப்

படியோ அப்படியே எனக்கும்; என் விஷயம் உனக்குத் தெரியாதா? நான் சொல்லித்தான் நீ தெரிந்துகொள்ள வேண்டுமோ? உன்னைச் சதா பார்த்துக் கொண்டே இருக்கவேண்டும்; உன்னுடைய இங்கித மொழிகளைக் கேட்டுக் கொண்டே இருக்கவேண்டும் என்பதே எனது பூரண ஆசை. ஆனால் ஒவ்வொரு சமயம் எப்படியோ வெட்கம் வந்துவிடுகிறது. அதென்னமோ பயம் மாத்திரம் இருப்பதில்லை. ஸ்நேகத்தில் நாணம்கூட என் வரவேண்டு மென்று எனக்கு விளங்கவில்லை. இது எனக்கொரு பெரிய தீராச்சந்தேகம்" என்றாள் துளசிபாய்.

"எத்தனையோ புஸ்தகங்களைப் படித்திருக்கிறேன் என்கிறாய் நீ! நாணம் பெண்களுக்குச் சிறந்த குணங்களுள் ஒன்றன்றோ? தவிர நாணம் காதலைச் சிறக்கச் செய்யும். நாணமில்லாத காதல் என்ன காதல்? நாணிக் கண்புதைத்தல் என்னும் ஒரு துறைக்கே ஒரு புலவர் நானூறு பாடல் பாடி யிருக்கிறார். மலரும் மணமும்போல் காதலும் நாணமும் கலந்திருக்க வேண்டும்...............சரி; இதைப்பற்றி அதிகம் விவரிப்பானேன்? எப்படி யிருந்தாலென்ன? உனது தகப்பனார் உனக்குப் பெரிய இடத்தில் மாப் பிள்ளையைப் பார்த்துக்கொண்டிருக்கிறார். நீயும் பெரிய வீட்டுப் பெண். தெய்வாநுக்கிரகத்தால் இதுவரை சந்தோஷமா யிருந்தோம். நானும் உன் னுடைய ஸ்நேகம் ஏற்பட்டதைப்பற்றி எவ்வளவோ நினைத்துக்கொண் டிருந்தேன். மனிதர் நினைக்கிறபடி என்ன நடக்கிறது? அதிர்ஷ்டம்போல் நடக்கட்டும் எத்தனை நாளைக்குத்தான் சந்தேகத்தை மனதில் வைத்திருப் பது? அதே ஒரு பெரிய சஞ்சலம். நாளைக்கு எப்படியாவது நமது விவாகத் தைப்பற்றி உன் தகப்பனாரிடம் முடிவு கேட்கப் போகிறேன். என்ன சொல்லுகிறீர்கள்? என்று கேட்டால் எல்லாம் விளங்கிவிடுகிறது" என்று மிகுந்த வருத்தத்தோடு சொன்னான் கிருஷ்ணாராவ்.

"ஐயையோ! நல்ல யோசனை செய்தாய். அவருடைய சங்கதி உனக்குத் தெரியாதா? இந்தப் பேச்சுக் காதில் நுழைவதற்கு முன் படு கோபம் வந்து விடும். உன்னை ஏதாவது வைதால் அது எனக்குப் பிராணாவஸ்தையாகவும் முடியும். நிற்க, இன்று காலை முதல் மஹா உக்கிரமாய் இருக்கிறார். நாளைய தினம் தாசில்தார் இவ்வூருக்கு வருகிறாராம். எனது தகப்பனாரும் தாசில் தாரும் இளமையில் ஒரு பள்ளிக்கூடத்தில் படித்தவர்களாம். அந்த விஸ்வா சத்தைக் கவனியாமல் தாசில்தார் ஏதோ ரிக்கார்டு விஷயமாய்க் கண்டித்து விட்டாராம் இதனால் அடக்கமுடியாத ஆத்திரத்தோடு வெடுவெடு சிடுசிடு என்றிருக்கிறார். யாரோடும் பேசவில்லை; முகத்தைப் பார்த்தால் எனக்கே பயமாயிருக்கிறது. இந்த லட்சணத்தில் நீ கலியாணப் பேச்செடுத்தால் வெகு அழகாயிருக்கும்; எரிகிற நெருப்பில் நெய்விட்டதுபோலாகிவிடும். நாளைக்குத் தாசில்தாரோடு சண்டை போட்டு வேலைக்கு ஆபத்துத் தேடிக் கொள்ளுவாரோ என்றதிலே எனக்குப் பெரிதாயிருக்கிறது. இந்தச் சமயத் தில்தானா கலியாணத்தைப் பற்றிக் கேட்க வேண்டும்? நமிருவருக்கும் நல்ல மரியாதை கிடைக்கும்" என்றாள் துளசிபாய். "தாசில்தார் நாளையதினம் இங்கு வருகிறாரா?" என்று கிருஷ்ணாராவ் கேட்டான். "சரி! சரி!! இது உனக்குத் தெரியாதா? லட்சுமிபாயோடு வருகிறார். லேடியை விட்டுவிட்டு சர்க்யூட் போகிற வழக்கந்தான் அவரிடங் கிடையாதே! இந்த விவகாரந்தானே நமக் கும் முதற்பாடம். (இருவரும் சிரிக்கிறார்கள்) இந்தச் சமயத்தில் வெளியில் வெங்கோபராயரின் இருமல் சப்தம் கேட்டது. அத்துடன் சம்பாஷணையும் முடிந்தது. தகப்பனாரைக் கண்டதும் துளசிபாய் ஆலேபோட ஆரம்பித்தாள். ராயரவர்களுக்குத் தாசில்தார் மீதுண்டான கோபந் தணிந்தபாடில்லை.

"பிச்சைக்காரப் பயலுக்கு இப்போது வாழ்வு வந்துவிட்டதுபோலிருக்கிறது. இவன் என்னிடந்தானு கைவரிசை காட்டவேண்டும். இவனுக்குத்தான் சுகம் துக்கம்; மற்றவர்களுக்கில்லை என்பது இவன் தீர்மானமோ? மூடப்பயல்! பள்ளிக்கூடத்தில் படிக்கும்போது மக்தைத் தோட்டத்தில் அரிநெல்லிக் காய் திருடினன். தோட்டக்காரன் கண்டுகொண்டு சாட்டையால் வளாசினன். எருமைமாதிரி தின்பதற்குத்தான் அலைவான். ஏதோ இந்தக் காலத்தில் இரண்டு சோணை எழுததுத் தெரிந்து விட்டதால் தாசில்தார் ஆகிவிட்டான். சிபாரசும இருந்தது அதிர்ஷ்டமும் இருந்தது. வரட்டும் நாளைக்குத் தெரியும் வேடிக்கை! நாலுபேரைக்கூட்டி ந்யாயம் பேசித் தீர்க்கிறேன்" என்று அவராக ஆத்திரமடங்கப் பேசிவிட்டு மிகுந்த கொந்தரவுடன் நான்கு கவளங்கூடச் சரியாக உண்ணுமல் எழுந்துவிட்டார் கிருஷ்ணராவ் ஆலோசனையில் ஆழ்ந்துவிட்டான். தனசிபாய் தகப்பனாரின் ஆர்ப்பாட்டங்களைப் பார்த்து நாளையதினம் வரப்போகும் தனர்த்தத்துக்கு இது உற்பாதமாகும் என்று தனக்குள் நினைத்துக்கொண்டு "ஈஸ்வரா! நீ எப்படி விட்டாலும் சரி" என்று பயந்தவனாகிச் சும்மா இருந்தான்.

* * * *

செவ்வாய்க்கிழமை காலை சுமார் 7½ மணியிருக்கும். உடுமலைப்பேட்டை ரஸ்தாவில் குமாரலிங்கத்தை நோக்கி இரண்டு மயிலைக் காளைகள் பூட்டப் பெற்ற வில்வண்டி ஒன்று சமீபித்துக்கொண்டிருந்தது வண்டியின் இரண்டு பக்கங்களிலும் திரை போடப்பட்டிருந்தது. வண்டியின் முன்னும் பின்னும் வில்லைபோட்ட தாலூகாச் சேவகர்கள் சிறு ஓட்டமாக வந்துகொண்டிருந் தனர். ஊரைச்சேர்ந்த குளக்கரைக்குப் பக்கத்தில் வண்டி நின்றது. வண்டி தாசில்தார் கோபிநாத ராயருடையதே. தாசில்தார் கனத்த உடம்பு படைத் தவராதலால் வெகு சிரமப்பட்டு இறங்கித் தாம் போர்த்திருந்த சிவப்புச் சால்வையை வண்டியில் போட்டுவிட்டு ரெவின்யூ இன்ஸ்பெக்டர் வீட்டுக்கு வண் டியை விடச்சொன்னார். வண்டியும் நகர்ந்தது. தாசில்தார் காலைக்கடன் முடிக்கச் சென்றார்.

குளக்கரையின் ஒருபக்கத்தில் சாவதானமாகப் பல் துலக்கிக்கொண் டிருந்த கிருஷ்ணராவ் இதையெல்லாம் கவனித்துக்கொண்டிருந்தான். புதிதாக வந்திருக்கும் தாசில்தார் என்பதை யூகித்துணர்ந்துகொண்டான். இவன் அந்த கிராம கர்ணமாதலால் தாசில்தாருக்கு வேண்டிய உபசாரங்கள் செய்யக் கடமைப்பட்டவன். சில கர்ணங்கள் தாசில்தார் வருகிறார் என்று கேள்விப்பட்ட தினத்திலிருந்து தூக்கம் பிடிக்காமல் வரவேற்பு சப்ளைக ளுக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய தடபுடலாக அலைந்துகொண் டிருப் பார்கள். நமது கிருஷ்ணராவ் அந்தத் "தொடை நடுங்கி" கோஷ்டியைச் சேர்ந்தவனல்லன். "தாசில்தாரைக் கிராமச்சாவடியில் சந்தித்துக்கொண் டாற் போதும்; குளக்கரையில் எதற்காகப் போய்ப் பார்க்கவேண்டும்? இங்கேயே சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்யவேண்டுமோ?" என்று நினைத் துக்கொண்டு வீட்டுக்குப் புறப்படும் உத்தேசத்தோடு திரும்பினன்.

கோபிநாத ராயர் தட்டுத் தடுமாறித் திரும்பிக் குளக்கரைக்கு வர ஒரு மணி நேரமாயிற்று ஊரை நோக்கிக் கரைவழியாக நடந்தார். ஒரு புளிய மரத்துக்குப் பக்கத்தில் வரும்போது—என்ன சொல்வது? பாவம்!—கருநாய் பின்தொடர்ந்து தாவி விழுந்தது. பிராமணர்; ஸ்தூல சரீரம்; ஓடக் கூடவில்லை. எப்படியாவது ஓடிவிடலாமென்றாலோ பார்த்தவர்கள் என்ன சொல்லிவிடுவார்களோ என்ற பயம்; கொஞ்சம் பயங்காட்டி நாயை வெருட்டிவிடலாமென்று திரும்பினார்; பேய்க்கருப்பான பெரிய பூத சரீரம்,

நெருப்புப்பொறி பறக்கும் சிவந்த கண்கள், நீண்டு தொங்கும் நாக்கு, நெஞ்சு திடுக்கிடும்படியான குரைப்போடுகூட உறுமல், நான்குகால் பாய்ச்சல் ஆகிய இவையெல்லாம் சேர்ந்து எமதருமன்தான் தம்மைக் கொண்டுபோக இப்படி வந்துவிட்டானோ என்று அந்த பிராமணர் திருஷ்டியிற் பட்டது. இவர் நாயைத் தூரத்தி லடிப்ப திருக்கட்டும்; இவருடைய பிராணனே ஊஞ்சலாட ஆரம்பித்து விட்டது. கருநாயின் கோபத்திற்குத் தாமே பாத்திரமான சங்கதி அவர் தெரிந்து கொண்டார். அதற்கொன்றும் சந்தேகமில்லை. ஆனால் என்ன காரணமாக அந்தச் சுணங்கனுக்குத்



தம்மீது இவ்வளவு ஆக்ரோஷம் வருவானேன்? என்று யோசிக்க நேரமில்லை. ஆலோசனை செய்தாலும் இலாபம் என்ன? தண்ணீரில் மீன்கள் துள்ளுவதற்கும், நிலத்தில் கன்றுக்குட்டிகள் அங்குமிங்கும் துள்ளிக்குதித்து விளையாடுவதற்கும் என்ன காரணமோ அதே காரணந்தான் ஸ்தூலதேகிகளைக் கண்டு கருநாய் அலக்கழிப்பதற்கும் காரணமாகும். அதன் ஸ்வபாவமிது. நாய்க்குணத்திற்கு நியாய அநியாயங் காண்பது யார்? எவ்விடத்திலாவது ஸ்தூல சரீரங்களைக் கண்டவுடன் அவ்வூராருக்குக் கருநாய் ஞாபகமும் கூடவே தோன்றும். நமது ரெவின்யூ இன்ஸ்பெக்டர் வெங்கோபாராயர் தமக்கு ஸ்தூல சரீரம் கொடுத்தமைக்காக பிரமதேவனைத் திட்டிக் கொண்டிருப்பதற்குக் காரணமும் இந்தக் கருநாயே யன்றோ?

எது எப்படியிருந்தாலும் தாசில்தார் பாடு திண்டாட்டத்தில் வந்துவிட்டது. நாயின் உக்கிர சொரூபத்தைக் கண்டதும், புளியமரத்தில் தொத்தினதும், அவசரமாகத் தொத்தும்போது கைநழுவி கடோத்கஜம்போன்ற தொந்தியோடு கீழே சரிந்ததும் ஆகிய விஷயங்களை ஏககாலத்தில் வருணிக்க எந்தப் பாஷையிலும் வார்த்தை கிடையாது. மகத்த கஷ்டத்தோடு புளியமரத்தின் மூதற்கொம்பைப் பிடித்துக்கொண்டு "உம்" என்று பகீரத பிரயத்தனம் செய்து சரீரத்தைச் சிறிது மேலேற்றி ஒரு அசைப்பு அசைத்துக் கால்களுக்கு மத்தியில் மேற் கொம்பை கெட்டியாக அழுத்திப் பற்றிக்கொண்டார். [இந்த பீட் (Feat) ஸ்தூல சரீரிகளுக்குச் சாத்தியமா என்ற சந்தேகம் பலருக்குத் தோன்றலாம். பிராணனுக்கே ஆபத்தாயிருக்கும்போது சாத்திய அசாத்திய விவகாரம் எப்படி வரும்? அசாத்தியங்கூட சாத்தியமாகித்தானே தீரவேண்டும்.] கைகள் கீழ்க்கொம்பை உடும்புபோல் பிடித்துக்கொண்டிருக்கின்றன. கால்கள் மேற் கொம்பை இறுகப்பற்றி யிருக்கின்றன. ஆள் முழுவதும் தலைகீழ், பார்வை கருநாயின் மேல்—உண்மையில் பார்க்கவேண்டியது அதுவே. சிருஷ்டிகர்த்தா பூமிக்கு ஆகர்ஷண சக்தியை (Gravity) எதற்காகக் கற்பித்திருக்கிறார்? என்று இந்த கஷ்ட தசையில் கோபிநாதராயர் நினைத்து வருந்தாமலிரார் என்பதிற் சந்தேகமில்லை. எதனாலென்பீர்களோ? தலை கீழாயிருந்த அவருடைய

உடம்பிலிருந்த இரத்தம் முழுவதும் முகத்திலிறங்கிவிட்டது. இதனால் முகம் கனத்துச் செவந்து போயிற்று. உடம்பு பாரம் அவ்வளவும் கைகளிலும் கால்களிலும் இருக்கிறது. தப்பித் தவறி கால்கள் நழுவிவிட்டாலோ கருநாய் பாதங்களைக் கடித்து விடுவதிற் சந்தேகமில்லை. கைப்பிடிப்புக் கொஞ்சம் தளர்ந்தாலும் முகம் நாயை எட்டிவிடும்; அப்போது பிராணனே போய்விட்டமாதிரிதான். இத்தகைய ஆபத்து நமது தாசில்தாரவர்களுக்கு எந்தக்காலத்திலும் நிகழ்ந்ததில்லை. பாரத்தினால் வளையுங் கொம்பு ஒடிந்து விடாமலிருப்பதற்கும், மரக்கிளைகளில் உள்ள கட்டெறும்புகள் கால்களிலும் கைகளிலும் கடிக்காமலிருப்பதற்கும், நாய்க்கு வேகம் பிறந்து தானே புறப்பட்டு ஓடிப்போவதற்கும் வேண்டிய கிருபை புரியுமாறு சர்வேஸ்வரனைப் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறார். ஆனால் நாய் மாத்திரம் "எவ்வளவு நேரம் மரத்தின்மேலிருப்பாயோ பார்க்கத்தான் போகிறேன்" என்பது போல் கூர்மையாகப் பார்த்துக்கொண்டு அவ்விடத்திலேயே ஸ்திரமாக உட்கார்ந்துவிட்டது,

இந்த விவகாரங்களை எல்லாம் கரையிலிருந்த கிருஷ்ணராவ் பார்த்துக் கொண்டேயிருந்தான். உத்தம பிராமணனுக்கு இப்படிப்பட்ட துர்கதி நேர்ந்ததே என்று வருத்தப்பட்டு கோபிநாத ராயருக்குள்ள கஷ்டத்தைத் தீர்த்துவிடும் உத்தேசத்தோடு இயற்கையாகவே பரோபகார சிந்தையுள்ள கிருஷ்ணராவ் புளியமரத்தின் சமீபம் ஓடிவந்தான். சன்னமான மனிதர்களுக்குக் கருநாய் பயம் என்வளவுங் கிடையாதென்பது அவனுக்கு நன்குதெரியும். குளக்கரையிலிருந்த கனமான திரண்ட கல்லொன்றை வலது கையில் எடுத்துக்கொண்டான். தலைகீழாகத் தொங்கிக்கொண்டிருந்த கோபிநாத ராயரின்மீது தன் கோப திருஷ்டியைச் செலுத்திக்கொண்டிருந்த கருநாய் நமது கிருஷ்ணராவைப் பார்க்கவில்லை நாய்க்கும் கிருஷ்ண ராவுக்கும் இடையில் ஐந்தாறு கஜ இடமிருந்தது; சரியான குறிபார்த்து கிருஷ்ண ராவ் கல்லைப் பிரயோகம் செய்தான். அஸ்திரப் பரீக்ஷை தினத்தில் அர்ச்சுனனுடைய பாணம் மாயப் பக்ஷியைத்தாக்கினது போல அந்தக்கல் சரியானபடி கருநாய் மீது பாய்ந்தது. பாய்ந்தவுடனே "குய்யாம்" என்ற ஒரு தீர்க்கமான ஊளையோடு ஒரு கணத்தில் பின் பக்கம் திரும்பி அந்தக் கிராம சிம்மம் வாலை இடுக்கிக்கொண்டு ஊருக்குள் மாயமாய்ப் பறந்து விட்டது.

மனப்பூர்வமாக தெய்வப் பிரார்த்தனை செய்துகொண்டிருந்த கோபிநாத ராயர் கீழே பார்த்துக்கொண்டிருக்கிறாரேயொழிய நடந்த விஷயம் இன்னதென அவருக்குக் கொஞ்சங்கூடத்தெரியாது. மனம் அவரிடத்தி லில்லை. (அதாவது பகவானிடம் லயித்திருந்தது) இதனால் பஞ்சேந்திரியங்களும் ஸ்தம்பித்து விட்டன. கல்லடி பட்ட நாயின் கர்ண கடூரமான சப்தம் இந்திரியங்களை விழிப்படையச் செய்துவிட்டது. துள்ளி விழுந்து கால்களின் பிடிப்பை தளரச்செய்தார். தளரச்செய்தாரா? இல்லை தளர்ந்து போயிற்று! பிற்பாடு கைகளையும் மெல்ல நழுவவிட்டார். நல்ல வேளையாகப் பிரமாதம் ஒன்றுமில்லை. முதலில் கைகளும் பிறபாடு கால்களும் விடப்பட்டிருந்தால் பிராணாபத்திற்குக்கூட என்ன குறைவு? பூர்த்தியாகப் பாதங்களைப் பூமியில் ஊன்றி நல்ல ஞாபகத்தோடு நாலாபக்கமும் பார்த்தார். கருநாய் அந்தர்த்தானமாகி எதிரில் புன்சிரிப்போடு நின்ற கிருஷ்ண ராவ் அவருடைய கண்களுக்குத் தென்பட்டார். சக்கரப்பிரயோகத்தினால் மகர சம்ஹாரம் செய்து கஜேந்திரனைக் காத்தருளிய அந்த ஆதிமூலப் பரம் பொருளே இங்கே தம்மையுங் காக்க 19 வயதுள்ள இளங்குமாரனைக் காட்சி

தந்தருளினரோ என்னமோ? என்று நினைத்துக்கொண்டார் கோபிநாதராயர். மரத்தின்மீதிருந்து பகவானைத் துதித்தது வீண்போகவில்லை என்று நினைத்து அவரது பயம் பொங்கிவழிந்த முகம விகசித்தது. ஒருவாறு தம்மைச் சமாளித்துக்கொண்டு சிறிது சிரிப்புக்காட்டி கிருஷ்ணராவின் கையைப்பிடித்து "அப்பனே! தெய்வந்தான் உன்னை இங்கு அனுப்பியிருக்கவேண்டும். சிறுவயதாயிருந்தாலும் நீ நல்ல புத்திசாலி; நீ யாருடைய மகன்? உனது பெயரென்ன?" என்று கேட்டார் கோபிநாதராயர். அதற்கு கிருஷ்ணராவ் "என்பெயர் கிருஷ்ணராவ் என்று சொல்லுவார்கள்; நான் இந்த கிராமகர்ணம்" என்று மறுமொழி கூறினன். இந்த மொழிகளைக் கேட்ட தாசில்தாருக்கு முதலிற் கொஞ்சம வெட்கம் தோன்றிற்று. (ஒரு தாசில்தார் நாயினும் ஒரு கர்ணத்தின் முன் திண்டாடினது வெட்கமாயிராதா?) "பார்த்தாயா! அந்த சண்டாளப்பயல் நாய் என்னையுங் கூட மரக்கொம்பில் ஏறச்செய்துவிட்டது!" என்று கிருஷ்ணராவின் புயங்களைப்பிடித்துக் குலுக்கிக்கொண்டு சிரித்தார் தாசில்தார். பிறகு இருவருஞ் சேர்ந்து ஊர்க்கதைகளைப் பேசிக்கொண்டு கிராமத்திற்குள் நடந்தார்கள்.



கிருஷ்ணராவ் தாசில்தாருக்கு வெங்கோபராயர் வீட்டைத் தூரத்திலிருந்தே காண்பித்தான். தாசில்தாரை அவரது ஜாகையில் கொண்டுபோய் விட்டவுடனே கிருஷ்ணராவ் ரெவின்யூ இன்ஸ்பெக்டர் வீட்டிற்குள் விரைவாகவந்து நுழைந்தான். துளசிபாய் ஐந்தாம்பாட புஸ்தகத்தில் ஒரு பாடத்தை வாசித்துக்கொண்டு ஒரு பக்கத்தி லுட்கார்ந்திருந்தாள். கிருஷ்ணராவைக் கண்டதும் புஸ்தகத்தை மூடிவிட்டு, துளசிபாய் மந்தஹாசத்தோடு "கிருஷ்ணா! தாசில்தாருடைய சம்சாரம் வந்திருக்கிறாள். நமது வீட்டுக்குப் பக்கத்திலுள்ள சாவடியில் இறங்கியிருக்கிறாள். இன்னும் அவர் வந்ததாகத் தெரியவில்லை. தாசில்தாருக்கும் என் தகப்பனாருக்கும் நடக்கப்போகும் சண்டையில் என்ன விபரீதம் விளையப்போகிறதோ என்ற பயமே எனக்கு அதிகமாயிருக்கிறது" என்றாள்.

(தொடரும்.)

"ஆனந்தபோதினி" ஏஜண்டு.

நமது "ஆனந்தபோதினி" மாத சஞ்சிகையின் ஏஜண்டு K. D. இராமசாமி ஐயரவர்கள் தென்னாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்துகொண்டிருக்கிறார்கள். சந்தாதாரராகச் சேர விரும்புவோர் அவர்களிடம் பணம் செலுத்தி ரசீது பெற்றுக்கொண்டு பத்திரிகையை வாங்கிக்கொள்ளலாம். ப-ர்.

(உறையூர். ஸ்ரீ. வே. வரதராஜய்யங்கார் எழுதியது.)

சுத்த நிஷாதம். நிஷாத ஸ்தானங்கள் மூன்றனுள் இது முதலிடம் வகித்தலின் சுத்த நிஷாத மெனப்படும்.

கைசிகீ நிஷாதம். தைவதத்திற்கு மூன்றாவது உச்சஸ்தானமாம் ஷட் ஸ்ருதி தைவதத்தில இது தங்கி நடுபட்டு நிலவுகின்றமையான் கைசிகீ நிஷாத மெனப்படும்.

காகலீ நிஷாதம். நிஷாத நிலைகள் மூன்றனுள் இது மிக்க இனிமையும் உயர்வு முடையதாதலின் காகலீ நிஷாதமெனப் பெயர் பெறும்.

## 4. ஸ்வர விளக்கம்.

இனிப் பழந்தமிழ் இசைநூற் குறிப்புக்களிற் புலனாவனவற்றையும், ஐம் பெருங் காப்பியங்களுட் சிறிய சிலப்பதிகாரத்தே காணக்கிடக்கும் இசை பற்றிய நுணுக்கங்களையும் இயன்றவரை தொகுத்து வரைவோம்.

நாதம் † அகர உகர மகரம் என்கிற பிரணவத்தின் வடிவமாம். அப்பிர ணவமான ஓங்காரத்தொனியினின்றும், ஸ்வரத்தொனி, நிர்க்கோஷத்வனி நிர்ணயகதொனி, வேணுத்தொனி, கானத்தொனி, சங்கதொனி, மேகத் தொனி, பேரிகைத்தொனி, மத்தளத்தொனி, குமந்தத்தொனி எனுந் தசவிதத் தொனிகள் பிறக்க, அவற்றின் காரணமாக ஆன்மா, மனது, அக்கினி, வாயு வாகும் நான்கின் முயற்சியான் ஏழு ஸ்வரங்களும், மந்தர இசை மத்திம இசை, தார இசை ஆகும் மூவிசைகளும் பிறப்பன. வடமொழி இசை நூலோர் சட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்யமம், பஞ்சமம், தைவதம, நிஷாதம் எனப் பெயரிட்டு, குறிக்குஞ் சுருக்க எழுத்துவகையான் ச, ரி, கா, ம, ப, த, நி என்ற ஏழினையும் தமிழர் முறையே குரல், துத்தம், கைக்கிளை, உழை இளி விளரி, தாரம் என்னுந் தக்க பெயர்கள் புனைந்து வழங்கி வந்தனர். இவற் றுள், மிடற்றால் குரலும், நாவால் துத்தமும், அண்ணத்தால், கைக்கிளையும், சிரத்தால் உழையும், நெற்றியால் இளியும், நெஞ்சால் விளரியும், மூக்கால் தாரமும் எய்துமென்பர்.

இவை தமக்கு, ஓசை உவமையான் மயில், இடபம், ஆடு, கொக்கு, குயில், குதிரை, யானை எனவும், சுவை உவமையான் பால், தேன், கிழான், நெய், ஏலம், வாழை, மாதுளங்கனி எனவும், மண உவமையான், மௌவல், முல்லை, கடம்பு, வஞ்சி, கைதல், பொன்னுவிரை, புன்னை எனவும் முறைப் படுத்தினர். இவற்றிற்கு முறையே அட்சரங்களாவன அஆ, இஈ, உஊ, எஏ, ஐஇ, ஒஓ, ஔஉ. இவைகட்கு மாத்திரை வகையான் குரல், ச, துத் தம் ச, கைக்கிளை உ, உழை ந, இளி ச, விளரி ந, தாரம் ந எனவும் புல னுக்கினர். இவற்றுள் ஏழுபாலை பிறக்கும். அவற்றைப் பண்பற்றிய பகுதியிற் வரைவோம்.

இவ்வேழு சுவரங்களின் ஆயுள், அதிதேவதை, இடம், காலம், த்வனி மலர், சுவை, நாமம, பயன், வாரம, திதி, நட்சத்திரம், நிறம், உணவு, ஜாதி பூச்சு உடை, அணி, அப்யசித்தோர், விருட்சம், வாகனம், ஆயுதம் முதலிய இலக்கணங்களுள் கிடைத்தவற்றைக்கொண்டு அறிந்தவரை சுவரச்சக்கர மொன்றை அமைத்துக் காட்டுவோம்.

---

† "அகர, உகர, மகரங்கள் தம்மாற் பகர ஒரு மரிதாகி" என்பது காண்க.

## ஸ்வரச் சக்கரம் 1.

| ஸ்வரங்கள் | சாதி (1) | வமிசம் (2) | அதிதேவதை (3) | தோன்றிடம் (4) | மலர் (5) | விருட்சம் (6) | உணவு (7) | உடை (8) |
|---|---|---|---|---|---|---|---|---|
| சட்ஜம் | பிராம்ம | தேவ | அக்னி | சம்பூ [தீவம் | சாதி | மா | தயிர்ச் [சோறு | வெண் [மை |
| ரிஷபம் | க்ஷத்திரி | ரிஷி | பிரம்மா | சாக [தீவம் | சண்பக [ம் | ஈச்சை | பாயஸம் | பீதாம் [பரம் |
| காந்தா [ரம் | வைசிய | தேவ | நாமகள் | குச [தீவம் | புன்னை | வாழை | பலகார [வகை | சிவப்பு |
| மத்யம [ம் | பிராம்ம | தேவ | சிவன் | கிரவுஞ் [சதீவம் | மல்லி [கை | எலுமிச் [சை | சித்திரா [ன்னம் | நீலம் |
| பஞ்சம [ம் | பிராம்ம | பிதிரு | திருமா [ல் | சால்மலி [தீவம் | மகிழம் [பூ | மாதுளை | கனி (மா) | மஞ்சள் |
| தைவத [ம் | க்ஷத்திரி | ரிஷி | விநாய [கர் | சுவேத [தீவம் | பாதிரிப் [பூ | திராட் [சை | வெறுஞ் [சோறு | பல நிற [ங்கள் |
| நிஷாத [ம் | வைசிய | ராக்ஷ | வெய்ய [வன் | புட்கர [தீவம் | தாமரை | புன்னை | அரிசி | சாமளம் |

## ஸ்வரச் சக்கரம் 2. (தொடர்ச்சி.)

| ஸ்வரங்கள் | பாஷை (9) | அணி (10) | ஆயுதம் (11) | வாகனம் (12) | உருவம் (13) | பூச்சு (14) | ரஸம்* (15) | தமிழ்ப்பெயர்கள் (16) |
|---|---|---|---|---|---|---|---|---|
| சட்ஜம் | கந்தர்வ | முத்து | கத்தி | அன்ன [ம் | தூலம் | குங்கும [ம் | வீர, அத்புதரௌத் [திர | குரல் |
| ரிஷபம் | கின்னர | நீலம் | பாகு | சிம்மம் | சூக்கும [ம் | அகில் | ,, | துத்தம் |
| காந்தா [ரம் | யட்ச | வயிரம் | கதை | அண்டபேரண் | தூலம் | கஸ்தூரி | கருணை | கைக்கி [ளை |
| மத்யம [ம் | கிம்புரு [டம் | வைடூரி [யம் | ஆழி | கலை | நீட்டு | பச்சைக் கற்பூரம் | ஹாஸ்ய சிருங்கா [ரம் | உழை |
| பஞ்சம [ம் | நாக | மரகதம் | பிண்டி [பாலம் | சாளுவ [ம் | ஒழுங்கு | கோரோ [சனை | ,, | இளி |
| தைவத [ம் | தேவ | கோமே [தகம் | நாராசம் | கிளி | நீட்டு | சந்தன [ம் | பீபத்ஸ, பயானக | விளரி |
| நிஷாத [ம் | இராக் [கத | புட்பம் | அங்குச [ம் | ...... | அதி தூ [லம் | கதம்பம் | கருணை | தாரம் |

* ரசம் ஒன்பது (நவரசங்கள்). அவையாவன: பெருநகை ரஸம், சோக ரஸம், கருணை ரஸம், வீர ரஸம், அச்ச ரஸம், அற்புத ரஸம், சாந்தி ரஸம், ரௌத்திர ரஸம், சிருங்கார ரஸம். இவை இசைக்குறியன. இசை நாடகத்திற் கின்றியமையாதாதலின் அந்நாடகத்திற்கும் நவரஸங்களும் உரியனவாம்.

மேற்கூறிய சுவரங்களுள் அந்தர காகலீக சுவரங்கள் சூத்திர ஜாதி என்பர்.

சுவரங்களின் பிறப்பிடத்தைக் கூறுங்கால் வடமொழி நூற்பிரமாணம் தமிழ் நூற் பிரமாணத்தினின்றும் சற்று பேதப்படுதல் காண்க. இச்சக்கரத்திற் கூறப்பெற்ற பதினாறு இலக்கணங்களோடு மேலே காட்டப்பெற்ற ஓசை, சுவை, மண உவமைகளைக் கூட்டிக்கொள்க. ஓசை உவமை முற்றிலும் ஒத்துவருதலும், மண உவமையான் பேதப்படுதலும் காண்க. சுவை உவமையைக் கூட்டிக்கொள்க. இனி, மாத்திரை அளவால் (மேலே கூறப்பெற்றது) ஒற்றுமை உண்டு.

மேற்காட்டிய சுவரங்கள் சஞ்சரிக்குங்கால் வாதீ, விவாதீ, சம்வாதீ, அனுவாதீ என நான்கு விதங்களாகச் சஞ்சரிக்கும். அவருள் வாதீ என்பது, பண் (ஆராகம்) ணினை உண்டுபண்ணுவதிலும், தாக்குங்கால் இன்ன இராகமென்று உணருவதிலும், தலை நிற்பதாம்; விவாதீ நுணுக்கமுடைதத்தந்து செவிக்கினிமை பயக்காது, பண்ணின் இன்பத்தைக் குறைக்கும். வாதீ சுவரங்கட்கு அரசாயும், விவாதி பகையாயும், சம்வாதி அமைச்சாயும், அனுவாதி ஏவற்றொழில் புரிவதாயு மிருப்பன சம்வாதீ என்பது, (இராகம) பண்ணினை உணர்த்திய பின்ப அதனை நிலவச் செய்வதில் ஆற்றலுள்ளதாம்; அனுவாதீ என்பது பண்ணின் முதன்மையான சுவரங்கட்கு முனையாகிலும் பின்னையாகிலும் நிலவி விரிவாகுந்தன்மையது.

மேற்கூறிய நான்கும் பின்வருமாறு விரியும்:

| சஞ்சாரபேதம். | உதாரணம். |
|---|---|
| வாதீ | சரிகமபதநிச, ரிகமபதநிச, கமபதநிச, மபதநிச, பதநிச, தநிச, நிச, ச. |
| விவாதீ. | சமகரிசரிகம, ரிபமகரி கமப—என்பதுபோல. |
| சம்வாதீ. | சநிதபமகரிச, நிதபமகரிச, தபமகரிச, பமகரிச, மகரிச, கரிச, ரிச, ச. |
| அனுவாதீ. | சரிகா-, ரிகமா-, கமபா-, மபதா-, பதநீ-தநிசா-, சநிதா-, நிதபா-, தபமா-, பமகா-, மகரீ-, கரிசா-, |

## ஸ்வரபிரஸ்தாரம்.

ஸ்வரபிரஸ்தாரத்தின் பேதங்களின் பெயர் முறையான் சம்பூர்ணம், ஷாடவம், ஔடுவம், சுவராந்தம், சாமிகம், காதிகம, ஆர்ச்சிகம் என ஏழு வகையான் வரும். அவற்றிற்கு உதாரணம் வருமாறு.

சம்பூர்ணம். சரிகமபதநி, ஷாடவம். சரிகமபத, ஔடுவம். சரிகமப,
சுவராந்தம். சரிகம, சாமிகம். சரிக, காதிகம். சரி, ஆர்ச்சிகம் ச.

**ஸ்தாயீ.** சாதாரணமாக ஸ்தாயீ என்ற பதத்தை இசை வல்லுநரன்றி, இசை விருப்பமுள்ள அனைவரும் கேட்டிருப்பார்கள். ஸ்தாயீயாவது கீழ் (தக்கு) நடு (மத்யம்) மேல் (எச்சு) என்று மூன்று வகைப்படும். அதாவது கீழ்க்குரலிற் பாடுதல், நடுக்குரலிற் பாடுதல, மேல்குரலிற் பாடுவது. இம்மூன்றனைத்தான் நாம் மேலே மந்தரம், மத்திமம, தாரம் என்று கூறியது. தக்கு (கீழ், மந்தரம) ஹிருதயத்திலிருந்தும், (மத்தியம் (மத்யம், நடு) கழுத்திலிருந்தும், எச்சு (மேல், தாரம்) சிரத்திலிருந்தும் தோன்று மியல்பின. ஒரு ஸ்தாயீ என்பது ஷட்ஜ பஞ்சமங்கள் பொருந்திய பன்னிரண்டு சுவர ஸ்தானங்களுள்ளது. (தொடரும்).

# குவைஞ கண்டு பிடித்தது யார்?

(A. சுருளியாண்டி, கௌட. ஆசிரியர்.)

சுமார் 300 ஆண்டுகட்கு முன்னர் டில்லி நகரில் ஷாஜஹான் சக்ரவர்த்தி அரசாட்சி செய்துகொண்டிருந்த காலத்து ஸ்பெயின் தேசத்தினர் பெரு எனும் தேசத்தைக் கைப்பற்றிக்கொண்டு ஆண்டுவந்தனர். இப் பெரு தேசமானது புது உலகமாகிய அமெரிக்கா கண்டத்திலுள்ள ஓர் சிறப்புற்ற நாடு. இந்துஸ்தானத்தில் பஞ்சாப், வங்காளம், மத்திய மாகாணங்கள் என அநேகம் பிரிவுகள் இருப்பதேபோன்று, பெரு தேசத்திலும் பல மாகாணங்களுண்டு. தேசமுழுவதிற்கும் ஓர் ராஜப் பிரதிநிதியும் அவரின்கீழ் மாகாணம் ஒவ்வொன்றிற்கும் ஓர் கவர்னருமாக இருந்தனர். ஓர்காலத்தில் சிங்கன் பிரபு என்பவர் பெரு தேசத்தில் ராஜப்பிரதிநிதியாக இருந்தார்.

சிங்கன் என்பது ஸ்பெயின் தேசத்திலுள்ள ஓர் நகரம். அந்நகரத்தில் நாம் மேற்சொன்ன சிங்கன் பிரபுவுக்கு மிகுந்த பூஸ்திதியுண்டு. அவர் மிக்க புகழ் பெற்றவர். ஐரோப்பாவிலுள்ள பல அரசர்கள் அவருக்கு நண்பர்கள். அவரது ஞாபகார்த்தமாக இடப்பெற்ற பெயரே "குவைஞ" என்பது.

இந்தியாவைப் போன்றே பெரு தேசத்திலும் அக்காலத்தில் விஷ ஜுரம் மிகுதியாக உண்டு. சிங்கன் பிரபு ராஜப்பிரதிநிதியா யிருந்தகாலத்து "டான்லூயி" என்பவர் பெருவிலுள்ள ஓர் மாகாணத்துக்குக் கவர்னரா யிருந்தார். அவருக்கு அடிக்கடி வெளிப்பிரயாணம் செய்வதில் விருப்ப மதிகம். ஓர்முறை அவர் தம் பரிவாரங்களோடு வெகுநாட்களாய் காட்டின் வழியே பிரயாணம் செய்துவிட்டுத் தம் ஊருக்கு மீளும் சமயம் அவருக்குக் கடுமையான ஜுரம் வந்துவிட்டது. ஒவ்வொரு தினமும் மாலை நேரத்தில் ஜுரம் தவறாமல் கடுமையாக வந்தது. சில தினங்களுக்குள் அவர் மிக்க பல ஹீனத்தை யடைந்தார். குதிரைச் சவாரி செய்யவும் திறனற்றுப்போனார். அவருடன் கூடவந்த ஜனங்கள் சமீபத்திலிருந்த கிராமத்திற்குள் சென்று கிராமாதிகாரியிடம் போய் கவர்னரின் தேக நிலையைச் சொல்லி, அவர் இப் பொழுதே ஊருக்குச் செல்லவேண்டுமென விரும்புவதால், ஒரு பல்லக்கில் அவரைத் தூக்கிக்கொண்டு செல்வதற்குச் சில போயிகளைத் திட்டம் செய்து தரவேண்டுமெனச் செப்பினர். அவ்வாறே கிராமத் தலைவனும் ஏற்பாடு செய்துவிட்டு வேறு சில மனிதருடன் கவர்னரைக் காணச் சென்றான்.

கூடாரத்தில் அதிக அபாயநிலையிலிருந்த கவர்னரைக் கண்டு, அவ்வபாய நிலையில் அவர் ஊருக்குச் செல்லவேண்டாமென்றும், இன்னும் சில தினங்கள் இங்கேயே தங்கி நாங்கள் தரும் மருந்தை யுண்டு சுகம் ஏற்பட்டபின் செல்லலா மெனவும், அதுவரை தங்களுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்ய நாங்கள் சித்தமாயிருக்கிறோமெனவும் அவர்கள் மன்றாடிக் கேட்டுக்கொண்டார்கள்.

அவர்கள் விருப்பத்திற் கிணங்க கவர்னரும் அங்கேயே இருப்பதாக ஒப்புக்கொண்டார். உடனே கிராமத்திலிருந்து சிலர், பக்கத்திலிருந்த காட்டிற்குப் போய் செந்நிறமுள்ள ஓர் பட்டையைக் கொணர்ந்து, அதை நன்றாகப் பொடித்து, அப்பொடியை ஜலத்தில் கரைத்து கவர்னருக்குத் தந்தனர். சாப்பிடுவதற்கு அது மிகவும் கசப்பாக இருந்தது. உண்ட சிறிது நேரத்திற்குள்ளாக அவருக்கு ஓர் வித மயக்கமுண்டாயிற்று. பின்

சிறிது நேரத்திற்குள் ஜுரம் குறைந்துவிட்டது. மறுநாள், வழக்கமாக ஜுரம் வரும் மாலை நேரத்தில் அவரது வேலையாட்கள் வந்து பார்த்து, அவர் ஜுரமில்லாமல் சுகமாயிருப்பதைக்கண்டு ஆச்சரியமுற்று, பயங்கரமான ஜுரத்தை இவ்வளவு சீக்கிரத்தில் நீக்கின இம்மரப்பட்டையின் சிறந்த குணத்தைப்பற்றி மிகவும் புகழ்ந்து பேசிக்கொண்டனர்.

பின்னும் சில தினங்கள் வரை அம்மருந்தையுண்டு கவர்னர் பூரண சுகமடைந்தார். பிறகு அவர் கிராமவாசிகளைத் தம்மிடமழைத்து, தம்முடன் காட்டுக்குவந்து அம்மரத்தைத் தனக்குக் காட்டும்படி கேட்டுக்கொண்டார். அவர்கள் அவ்வாறே சென்று காண்பிக்க, கவர்னர் அதன் இலை, பூ, பட்டை முதலியவற்றை மாதிரிக்காக எடுத்துக்கொண்டார். இம்மரம் பெருதேசத் துக்காடுகளிலும் மிகுதியாக உண்டு.

இது நடந்த கொஞ்ச காலத்திற்குப்பின் சிங்கன் பிரபுவின் மனைவிக்கு விஷஜுரம் கண்டது. வைத்தியர்களால் கைவிடப்பட்டு இறந்துபோகும் நிலையிலிருந்த தன் மனைவியைப்பற்றி ராஜப்பிரதிநிதிக்கும் மற்றவர்களுக்கும் உண்டான கவலைக்களவில்லை. இதையறிந்த கவர்னர் மிக்க கவலைகொண்டு சிலரை உடனே காட்டிற்கனுப்பி, மேற்சொன்ன மரத்தின் பட்டையை வருவித்து, வேகமாய் ஓடக்கூடிய ஓர் மனிதனிடம் அப்பட்டையையும் அப்பட்டையின் குண விசேஷங்களைப் பற்றியும், உபயோகிக்க வேண்டிய முறையைப்பற்றியும் எழுதிய ஒரு கடிதத்தையும் கொடுத்து ராஜப்பிரதிநிதி யின் மனைவிக்கு வைத்தியம் செய்யும் வைத்தியரிடம் கொடுக்கும்படி அனுப்பினார்.

கடிதத்தையும் பட்டையையும் பெற்றுக்கொண்ட வைத்தியர் மன மகிழ்வடைந்து பட்டையைப் பொடி செய்து வெந்நீரிற் கலந்து அச்சீமாட் டிக்குக் கொடுத்தார். சில நாழிகை யளவில் ஜுரம் நின்றுபோக அவள் மிக்க சுகத்தை யடைந்தாள். மிக்க புகழ் வாய்ந்த சிங்கன் பிரபுவின் மனை விக்கு உண்டான ஜுரத்தை நீக்கிய அம்மரத்திற்கு "சிங்கொனு" என்ற பெயர் உண்டாயிற்று. சிங்கன் பிரபு மறுபடியும் ஐரோப்பாவிற்குப் போன பொழுது அப்பட்டையை விசேஷமாகக் கொண்டுபோனர். அப்பொழுது தான் அம்மருந்து முதல் முதல் ஐரோப்பாவிற்குக் கொண்டுவரப்பட்டது. அப்பட்டையினின்றும் செய்யப்பெறும் மருந்திற்குக் "குவைனு" என்று பெயர் வந்தது.

## நேயர்கள் கவனிக்க.

"ஆனந்தபோதினி" மாத சஞ்சிகையையே வாரப் பத்திரிகையாக மாற்றப்போவதாகச் சில அன்பர்கள் நினைத்துக் கொண்டு இருக்கிறார்கள் என்று தெரியவருகிறது அவர்கள் புரட்டாசிமாத சஞ்சிகையில் வார விளம்பரத்தைக் கவனிப்பார்களாக. மாத வெளியீடு வழக்கப்படி இன்னும் சிறந்த அமைப்பில் வெளி வருவதோடு வாரப்பத்திரிகையும் வெளியிடப்படும் என்பதை மறுபடியும் தெரிவித்துக் கொள்ளுகிறோம். பத்திராதிபர்.

# ஆன்றோர் அமுதமொழிகள்

(219-ம் பக்கத் தொடர்ச்சி.)

A. P. இராமன், B. A.

75. "கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக" (திருவள்ளுவர்.)

Learn perfectly what thou hast to learn, and when thou hast learned it, act upon and persist in it. *Thiruvalluvar.*

76. "யாகாவா ராயினும் நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்கப் பட்டு" (திருவள்ளுவர்.)

Whatever besides you leave unguarded, guard your tongue; otherwise errors of speech and consequent misery will ensue *Thiruvalluvar.*

77. "காக்கைக்குத் தன்குஞ்சு பொன் குஞ்சு"

Even to a crow its young one is regarded as a golden one (i.e.,) the best.

78. "காவல்தானே பாவையர்க் கழகு"

Chastity becomes a woman.

79. "காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்"

Winnow while the wind blows; i.e., attend to a thing at a favourable time.

80. "கிழவன் பேச்சு கிண்ணரக்காரனுக் கேற்குமோ?"

Will the faltering words of an old man be agreeable to an organist?

81. "பாரைக்கூ டாடாத பாறை பசுமரத்தின் வேருக்கூ டாடி விடும்"

A rock that cannot be moved by a crow-bar gives way to the roots of a tree.

82. "மயிரூடாடா நட்புச் சிறிது பொருளூடாடக் கெடும்."

Friendship so close as not to admit of even a hair-like interruption may be destroyed by pecuniary dealings.

83. "ஊணுக்கு முந்தவேண்டும் கோளுக்குப் பிந்தவேண்டும்"

Be first at a feast and the last at slander.

84. "ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் திரு"

The wealth of one possessing great wisdom, and who is much liked by the public is like a tank filled with water to which all have access.

85. "தொட்டனைத் தூறு மணற்கேணி
மாந்தர்க்குக் கற்றனைத் தூறு மறிவு"

The more you dig in a sandy soil the more does the water spring forth; so the more you apply to science the more your knowledge will increase.




# கிருஷ்ணாவின் அல்லது துப்பறியும் சீடன்.

(222-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஆரணி-குப்புசாமி முதலியார்.

**ஆனந்த:**—" உனக்குத் தோன்றவில்லையென்பது உண்மையே. ஆனால் நீ மனோன்மணியைக் காணவுமில்லை. அவள் உனக்கு ஒரு கடிதம்கூட எழுதவு மில்லையென்று நான் நிச்சயமாய்க் கூறுவேன்" என்றான். அவன் நிரபராதியென்று உனக்கு எவ்வளவு நிச்சயமாய்த் தோன்றுகிறதோ அவ்வளவு நிச்சயமாகவே யெனக்கும் அவன் நிரபராதியே யென்று தோன்றுகிறது. நீமட்டும் கொஞ்சம் உதவி செய்தால் நான் கட்டாயம் அவளைக் கண்டுபிடித்து வீட்டில் கொண்டுவந்து சேர்ப்பேன்" என்றான்.

**இராஜவேல்:**—சரி, எனக்கு எப்படிக் கூறுகிறாயோ அப்படியே நடந்து கொள்கிறேன்.

ஆனந்தவின் சந்தோஷத்தோடு "பேஷ்! அப்படிக் கூறுவாயென்றே நம்பினேன். இப்போது இக்கடிதங்கள் உண்மையானவை யென்று நீ நம்பினால் எப்படி நடந்து கொள்வாயோ அப்படியே வெளிக்கு நடந்துகொள். நமக்குத் தெரிந்திருக்கும் இரகசியங்களை ஒருவருக்கும் வெளியிடாதே நான் நாளை யுன்னை மறுபடி காண்பேன். அப்போது யாவும் விவரமாய்க் கூறுகிறேன். நீ என்னைக் காணாதிருந்தால் உலகநாதம் பிள்ளையிடமும் அவர் மனைவியிடமும் எப்படி நடந்துகொள்வாயோ அப்படியே யினியும் நடந்து கொள். என்னைத்தவிர வேறு யாரையும் நம்பாதே. அல்லது, இதோ இம்மாதிரி யுன் கையைப் பிடித்துக் குறி யார் காட்டுகிறார்களோ, அவர்கள் ஆணோ பெண்ணோ, வாலிபமோ கிழமோ, பணக்காரனோ ஏழையோ, பிச்சைக்காரனோ யாராயிருந்தாலும் நம்பு. அந்த ஆள் உன் கண்களுக்கு எப்படித் தோற்றினும் அது நானேயென்று பூரணமாய் நம்பிக்கொள். இதை யொருபோதும் மறந்துவிடாதே" என்று கூறிவிட்டு நான்போய் வருகிறேன் என்று அங்கிருந்து புறப்பட்டான். இராஜவேல் விஷயமும் அன்று நடந்த சங்கதிகளும் தன் மனதிற்குத் திருப்தியாய்த் தன் வீட்டை நோக்கிச் சென்றான்.

அவன் வீட்டை நெருங்கும்போது, அவன் மனதிற்குத் துயரமான நிலைமை யேற்பட்டது. என்ன காரணமென்று அவனுக்குப் புலப்படவில்லை. என்ன சாமார்த்தியம் செய்தும் அது அவன் மனதைவிட்டு நீங்கவில்லை. இம்மாதிரி துயரமான உணர்ச்சி அவனுக்கு ஒருபோதும் உண்டானதே யில்லை.

அதன்மேல் அவன் துரிதமாய்ச்சென்று தன் தங்கையின் அறையைத் திறந்தான். அங்கு ஒரு சந்தடியுமில்லை. இருள் சூழ்ந்திருந்தது. "ஓகோ நமது தங்கை இன்னும் வீட்டிற்கு வரவில்லைபோல் காண்கிறது" என்று நினைத்துக் கொண்டான்.

ஏதோ ஜாக்கிரதையாயிரு என்று அவன் மனதில் கூறுவதுபோலிருந்தது. ஆகையால் அவன் தைரியமாய் உள்ளே செல்லவில்லை. காரணம் ஒன்றும் புலப்படவில்லை. சற்றுநேரம் உற்றுக் கேட்டான். கொஞ்சம்கூட சந்தடியேயில்லை.

நாம் ஏன் இப்படி அச்சப்படவேண்டும் என்று தைரியத்தோடு ஒரு நெருப்புக் குச்சியை ஏற்றினன். தன்முன் மேஜையருகில் ஒரு மனிதன் குனிந்துகொண்டிருப்பது தெரிந்தது. உடனே போய் அவன் மேற் பாய்ந்து பிடித்துக்கொண்டான். மறுநிமிடம் "ஓ கடவுளே!" யென்று அலறிக்கொண்டு எழுந்து நின்றான்.

---

## 7—வது அத்தியாயம்.

ஆனந்தஸிங் மனதைத் தைரியம் செய்துகொண்டு இன்னொரு தீக் குச்சியை யேற்றிக்கொண்டு, அங்கிருந்த தீபத்தை யேற்றியதும் "தந்தையே தந்தையே" என்று அலறினன். ஏனெனில் கிருஷ்ணஸிங் அங்கு சவமாய் விழுந்து கிடக்கிறான்.

அவன் அங்கு சவமாய்க் கிடப்பது தன் தந்தை யென்றறிந்ததே, தந்தையே தந்தையே என்றலறிக் கண்ணீர்விட்டுக் குழந்தைபோல் அழுதான். மறுநிமிடம் அவன் கண்கள் சிவந்து நெருப்புப் பொறி வீசின. அவன் தன் தந்தையின் கரங்களைக் கையில் எடுத்துக்கொண்டு "ஆகா! உன்னைக் கொலை செய்தப் பாதகர்மேல் வஞ்சம் தீர்த்துக்கொள்ளும் வரையில் நான் கண் உறங்கேன் என்பது சத்தியம்" என்று பிரமாணம் செய்து கொண்டான்.

பிறகு தன் தந்தைக்கு ஒரு முத்தமளித்துவிட்டு எழுந்து நிதானமாய் அறையில் இருக்கும் வஸ்துக்கள் எதெது எங்கெங்கே இருக்கிறது என்று கவனித்தான். அதன்பின் தன் அறைக்குச் சென்று மாறு வேடத்தைக் களைந்து தன சொந்த உடையை யணிந்துகொண்டு ஒரு பையில் சில உடைகளை யெடுத்து வைத்துக்கொண்டு கதவை மூடிவிட்டு நேராய் ஒரு ஹோட்டலுக்குச் சென்றான்.

அங்கு தன்பெயர் சம்பந்தன் என்று பதிவு செய்து ஒரு அறை வாடகைக்குப் பேசிக்கொண்டு கால்மணி நேரத்திற்குள் அங்கிருந்து புறப்பட்டு உலகநாதம் பிள்ளையின் விவகாரத்தைப் பற்றித் தன் தந்தைக்கு ரிபார்சு செய்த இன்ஸ்பெக்டர் இராஜம்பிள்ளை வீட்டிற்குச் சென்றான்.

ஆனந்தஸிங் இன்ஸ்பெக்டர் எதிரில் நின்றதும் "நான் துப்பறியும் கிருஷ்ணஸிங்கின் புத்திரன்" என்றான். அவன் கூறிய மாதிரியால் இன்ஸ்பெக்டர் முகத்தில் உண்டாகத் தொடங்கிய சந்தோஷம் சட்டென்று மறைந்து விட்டது.

ஆனந்தஸிங் "தாங்கள் என் தந்தையின் அன்பரா யிருந்தீர்..." என்றதே இன்ஸ்பெக்டர் திடுக்கிட்டு,

"என்ன?—அன்பரா யிருந்தீர் என்று கூறினை? இப்போதும் சிநேகனாகவே யிருக்கிறேனே" என்றார்.

**ஆனந்:**—என் தந்தை யிறந்து போனார். கொல்லப்பட்டார். ஒன்றரை மணிக்கு முன்புதான்

**இன்ஸ்:**—அய்யோ! கொலை செய்யப்பட்டாரா? யாரால்?

**ஆனந்:**—தாங்கள் பாங்கிக்கார உலகநாதம் பிள்ளை கேஸை என் தந்தையிடம் அனுப்பினீர். அதை நானே கண்டு பிடிக்கத்தொடங்கி சில முக்கியமான விஷயங்களைக் கண்டறிந்தேன். நான் என் தந்தையைப்போல் மாறு வேடமணிந்திருந்ததால் அக்கள்ளப்பயல்கள் என் தந்தைபோல இதில் வேலைசெய்கிறார் என்று எண்ணிக்கொண்டார்கள். அவர்கள் என் பின்னால் ஒருவனை மோசூல் வைத்தார்கள். என் தந்தை ஐந்து மணிக்கு வெளியில் சென்றார். நானும் சற்றுநேரத்திற்குள் புறப்பட்டு இரண்டு மணிநேரம் வெளியிலிருந்து சற்று முன்பே வீட்டிற்குத் திரும்பினேன்.

மோசூல் இருந்தவன் என் தந்தையைப் பின்பற்றிச்சென்றான். ஆனால் அவன் கொஞ்சதூரமே அவரைத் தொடர்ந்து சென்றான். பிறகு பின்தங்கி விட்டு ஒரு பலமான மனிதனைச் சந்தித்தான். இருவரும் எங்கள் வீட்டிற்குச் சென்று மாடிமேலேறி நாங்கள் வசிக்கும் அறையின் பூட்டை யுடைத்துப் பதுங்கியிருந்தார்கள். மோசூல் வந்த குள்ளன் கதவின் அருகில் நின்றிருந்தான். தடித்தமனிதன் அலமாரியருகில் நின்றிருந்தான். குள்ளன் ஒரு "சேண்ட்பேகை" (Sand Bag) யும் மற்றவன் ஒரு கத்தியையும் கரங்களில் வைத்திருந்தார்கள். பலசாலி நினைத்தபடி என் தந்தை நெருப்புக்குச்சி யெடுக்க அலமாரியருகிற் செல்லவில்லை.

---

# மதிப்புரை.

கம்ம சரித்திரச் சுருக்கம்:—இப் புத்தகம் கம்மவாரின் பூர்வோத்தரத்தை விளக்குவது. புராணக் கதைகள், கன்ன பரம்பரை வரலாறு, சரித்திர ஆராய்ச்சிக் குறிப்புகள் ஆகியவற்றை ஆதாரமாகக்கொண்டு பெரிய கலையமுத்தூர் (பழநி) ஸ்ரீமான் சு. வேங்கடசாமிநாயுடு அவர்களால் எழுதப்பட்டது. அழகிய செந்தமிழ் நடையில் அமைந்தது.

விலை அணா 4.

கிடைக்குமிடம்:—

சு. வேங்கடசாமி நாயுடு,
நெ. 7, பவளக்கார வீதி,
சென்னை, ஜி. டி.

***

முருகன்:—ஓர் உழவன். இது உழவின் மேன்மையை உள்ளுறையாகக் கொண்டு ஸ்ரீமான் K. S. வெங்கிடரமணி, எம்.ஏ., பி.எல். அவர்கள் ஆங்கிலத்தி லியற்றிய நவீன நாவலின் மொழி பெயர்ப்பு. ஸ்ரீமதி கிருஷ்ண குமாரி அவர்களால் மொழி பெயர்க்கப்பட்டது. நடையின் போக்கும் விஷயமும் நன்றாயிருந்தாலும் தமிழ் மொழி மரபும் பிழைகளும் கவனிக்கப்பட வில்லை. அடுத்த பதிப்பில் திருத்தப்படும் என்று நம்புகிறோம்.

விலை ரூபா 1—8—0

கிடைக்குமிடம்:—

மதராஸ் லா ஜர்னல் ஆபீஸ்,
மயிலாப்பூர், சென்னை.

***

மெய்ஞ்ஞான போதம் (இரண்டாம் பாகம்) இப்புத்தகம் 1912-வது வருஷ "லோகோபகாரி" பத்திரிகையின் முதற்பக்கத்தில் ஆசிரியர் கோ. வடிவேலு செட்டியாரவர்களால் எழுதப்பெற்றுப் பிரசுரமான 53 வேதாந்த விஷயங்களின் திரட்டு.

விலை ரூபா 1.

கிடைக்குமிடம்:—

அம்பா விலாச புத்தகசாலை,
கோமளேசுவரன் பேட்டை,
சென்னை.



# வர்த்தமானப்பகுதி

**மிருகக் குழந்தை:**—கொழும்பைச் சேர்ந்த வில்லெஸ்டன் ஆஸ்பத்திரியிலுள்ள பெண் குழந்தையொன்று மிருக சுபாவம் உள்ளதாயிருக்கிறதாம். வயது மூன்று தேகாரோக்கியம் உள்ளது. இக்குழந்தை கூட்டில் அடைத்து வைக்கப்பட்டிருக்கிறதாம். அதற்கு உடுத்தப் பெற்ற எந்த உடையையும் அது கிழித்தெறிவதனால் சாக்குத் துணியை உடுத்தினார்களாம். அதையும் கிழித்து மென்று தின்றுவிடுகிறதாம்.

* * *

**10 அடி உயரமுள்ள சிறுவன்:**—பாரசீக நாட்டில் 14 வயதேயுள்ள முஸ்லிம் சிறுவனொருவன் 10 அடி உயரமுள்ளவனாயிருக்கின்றானாம்.

* * *

**வடதுருவ அதிசயம்:**—வடதுருவப் பிரதேசத்தில் ஆகாயம் மிகவும் சுத்தமாயிருப்பதால் சத்தம் வெகுதூரம் கேட்குமாம். இரண்டு மைல் தூரத்திலுள்ள இரு மனிதர்கள் சுலபமாகப் பேசிக்கொள்ள முடியுமாம்.

* * *

**செயற்கை மண்டையுடன் வாழும் மனிதர்:**—டாரண்டோ நகரில் ஒரு மின்சார நிபுணர் இருக்கிறார். இவர் மண்டையில் ஒரு சமயம் மின்சார வேகம் தாக்க 6 நாட்கள் வரை ஸ்மரணையற்றுக் கிடந்தார். வைத்திய நிபுணர்கள் இவர் உணர்வு பெற்றாலும் நீண்டகாலம் ஜீவிக்க முடியாதென்று கருதி மண்டையோட்டை ஒழுங்குபடுத்த முயற்சித்தனர். அறுபது சதுர அங்குல எலும்பைத் துண்டுதுண்டாக எடுத்துவிட்டு அதற்குப் பதிலாக ரசாயன செமண்ட் வைத்து தொண்டைத் தோலை எடுத்து மேலே ஒட்டினார்கள். இவ்வாறு புதிய மண்டை ஓடு பெற்றவர் சுகமாகப் பிழைத்திருக்கிறார். இவர் பெயர் நார்மன்.

* * *

**மூளை உழைப்பு:**—நாம் நான்கு மணிநேரம் அதிக மூளை வேலை செய்து யோசிப்பதால் அடையும் களைப்பைவிட 10 மணிநேர சரீர உழைப்பால் ஏற்படும் களைப்பு குறைவாயிருக்கிறதென்று வைத்திய நிபுணர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

* * *

**ஒரு வைத்தியரின் அற்புத சக்தி:**—பாரிஸ் நகரத்திலுள்ள டாக்டரொருவர் வயது சென்ற பெண்களுக்குக் கன்னத்தில் "ஆபரேஷன்" செய்து இளம் பெண்களின் கன்னங்களைப்போல் செய்துவிடுகிறாராம். இதற்குக் கூலி நூறு பவுன்களாம். ஒரு கிழவியினுடைய கன்னத்தை இவ்விதமாக மாற்றி விளம்பரம் செய்ய ஏற்பாடு செய்திருக்கிறாராம்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**விபவஹூ மார்கழிமூ—கலியுகாதி 5030, சாலிவாகனம் 1851,**
**பசலி 1338—கொல்லமாண்டு 1104—ஹிஜரி 1347,**
**இங்கிலீஷ் 1928-29ஹூ டிசம்பர்மூ—ஜனவரிமூ**

| மார்கழிமீ | டிசம்பர் | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 15 | சனி | திரி28-13 | உத்45-0 | சித்60 | ஷடசீதி புண்யகாலம் |
| 2 | 16 | ஞா | சது32-20 | திரு49-40 | அ49-40ம | மாசசதுர்த்தி விரதம் |
| 3 | 17 | திங் | பஞ்35-25 | அவி54-15 | சித்60 | நாகபஞ்சமி |
| 4 | 18 | செவ் | சஷ்37-8 | சதை56-48 | மர60 | சஷ்டி, சூரியவிரதம் |
| 5 | 19 | புத | சப்37-15 | பூரட்57-55 | அ57-55சி | மாதிராம் ஜெபிக்க, மாடு |
| 6 | 20 | வியா | அ35-48 | உத்57-23 | சித்60 | கரிநாள் [வாங்க |
| 7 | 21 | வெ | நவ32-35 | ரேவ55-5 | அமி60 | |
| 8 | 22 | சனி | தச27-45 | அஸ்51-18 | சித்60 | மகராயணம் நா-2-27 |
| 9 | 23 | ஞா | ஏகா21-30 | பரணி46-13 | சித்60 | வைகுண்ட ஏகாதசி |
| 10 | 24 | திங் | து13-50 | கிரு✕39-55 | ம39-55அ | கிருத்திகை, பிரதோஷம் |
| 11 | 25 | செ | திர5-2<br>சது 56 23 | ரோ33-3 | அ33-3சி | கரிநாள், அவமாகம், பாஷாண சதுர்தசி |
| 12 | 26 | புத | ○47-25 | மிரு25-40 | சித்60 | பௌர்ணமி, ஸ்ரீ நடராஜ அபிஷேகம், சிவபூஜை |
| 13 | 27 | வியா | பிர38-18 | திரு18-25 | ம18-25அ | மார்கசிரபகுளம், ஆருத்திரா தரிசனம் |
| 14 | 28 | வெ | துதி30-3 | புன11-45 | சி11-45ம | கர்ப்போட்ட ஆரம்பம் நா-58-50 |
| 15 | 29 | சனி | திரி22-55 | பூசம்6-0. | சித்60 | |
| 16 | 30 | ஞா | சது17-33 | ஆயி1-45<br>மகம்59-10 | சி1-45ம | |
| 17 | 31 | திங் | பஞ்13-55 | பூரம்58-58 | சித்60 | |
| 18 | 1 | செவ் | சஷ்12-35 | உத்60-0 | அமி60 | |
| 19 | 2 | புத | சப 3 8 | உத்0-20 | அ0-20ம | |
| 20 | 3 | வியா | அ15-55 | அஸ்4-10 | சித்60 | |
| 21 | 4 | வெ | நவ20-28 | சித்9-33 | சித்60 | |
| 22 | 5 | சனி | தச26-18 | சுவா16-28 | அ16-28சி | |
| 23 | 6 | ஞா | ஏகா33-3 | விசா24-13 | மர60 | |
| 24 | 7 | திங் | து10-8 | அனு32-8 | சித்60 | தானியம் செலவிட |
| 25 | 8 | செவ் | திர46-50 | கேட்39-55 | ம39-55அ | பிரதோஷம் |
| 26 | 9 | புத | சது52-55 | மூல47-15 | ம47-15அ | மாசசிவராத்திரி |
| 27 | 10 | வியா | ●58-20 | பூரா53-45 | சித்60 | சர்வத்திர அமாவாசை, கர்ப்போட்ட நிவர்த்தி நா-3-33 |
| 28 | 11 | வெ | பிர60-0 | உத்59-20 | சி59-20ம | திருதினஸ்பிருக் |
| 29 | 12 | சனி | பிர2 35 | திரு60-0 | சி 60 | போகிபண்டிகை |

1929-ஹு ஜனவரிமீ

| | | | |
|---|---|---|---|
| | குரு | ராகு | செ |
| | 2-தனு-புத<br>9-தனு-சனி<br>17-கும்-சுக்<br>20-மகர-புத<br>28-ரிஷ-செ | | |
| சுக் | | | |
| சூ-பு | சனி<br>கேது | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" POWER PRESS,
LAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.